



அவர்கள் தோற்றத்திலே
ஒற்றுமையில்லை,
அவர்கள் அனைவரும்
உபயோகிப்பது
பரிபூரண ஒப்பனைச்
சாதனமான



க்ருக்ஸ்
# லாக்டோ-காலமைன்

இழைவான மென்மை வாய்ந்த
க்ருக்ஸ் லாக்டோ-காலமைன் எத்தகைய
குறைபாட்டையும் ஒளித்துவிடும்
பரிபூரண ஒப்பனைச் சாதனம்.
நாள்தோறும் சருமத்தின்மீது தடவுங்கள்
லாக்டோ-காலமைன. இதமான
ஆற்றும் குணமுள்ள காலமைன்,
செறிவூட்டும் செயல் திறனுள்ள
விட்ச் ஹேஸல் இரண்டும் இணைந்து
உங்கள் சருமத்திற்கு எழிலூட்டும்




க்ருக்ஸ்
# லாக்டோ-காலமைன்

மாசில்லா அழகுக்கு!
மேலும் உங்களுக்கு உரிய அழகு
சாதனங்கள் லாக்டோ-காலமைன்
டால்கம் பவுடர் மற்றும் க்ரீம்.

களவிடமுடியாத க்ருக்ஸ் ஸீலும்,
க்ருக்ஸ் சின்னமும் இருக்கிறதா
என்று கவனித்து வாங்குங்கள்.
க்ருக்ஸ் இன்டர்ஃப்ரான் லிமிடெட், பம்பாய்-25.

GIL. 72 TH





"என்ன மோகன்! குடும்பக் கட்டுப்பாட்டை உத்தேசித்து இரண்டே இரண்டா?"

"இல்லே, ஸ்கூட்டரை உத்தேசித்துத்தான். இதில் இதற்குமேல் இட மில்லேயே!"

# கல்கி

## பொருளடக்கம்

பிலவங்க, கார்த்திகை 3 - நவம்பர் 19



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே: சம்பவங்களும் கற்பனையே.

நீங்கள் அந்நியர், உங்கள் உதவியை
ஏந்க மாட்டேன்







ருஷ்யா புது உபகிரகங்களைப்
பறக்கவிட்டது!

ருஷ்ய
புரட்சி
50-வது வருஷம்



தமிழ்த்திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மலர் 27 ★ இதழ் 16



# பொன்விழாவின் படிப்பினை

ருஷியாவில் கம்யூனிஸ்ட் ஆட்சி ஏற்பட்டு ஐம்பதாண்டுகள் நிறைந்ததற்காக மாஸ்கோவில் பெருவிழா எடுத்திருக்கிறார்கள். உலகில் உள்ள கம்யூனிஸ்ட் அல்லாத சர்க்கார்களில் இரண்டே இரண்டுதாம் இதில் கலந்து கொண்டன. இவற்றில் ஒன்று பாரதம்! நாட்டு நல்லறிஞர்களின் வாக்கைத் தட்டிவிட்டு ஸ்ரீமதி இந்திராகாந்தி அவர்கள் பிடிவாதமாக ருஷியாவுக்குச் சென்று திரும்பியிருக்கிறார். 'பொன் விழாக் கொண்டாட்டத்தில் அமெரிக்காவை ருஷியா தாக்கிப் பேசும். நடுநிலைமையாளரான நாம் இத்தகைய ஒரு கூட்டத்தில் கலந்து கொள்வது அழகல்ல' என்று சுதந்திரக் கட்சிப் பிரமுகர்கள் முன்பே பிரதமரவர்களுக்கு எடுத்துச் சொன்னார்கள். அதற்குப் பிரதமர் செவிசாய்க்கவில்லை. அமெரிக்காவைத் தாக்கியதோடு மட்டுமின்றி, விண்வெளி தளங்களிலிருந்து உலகின் எந்தப் பகுதிக்கு வேண்டுமாயினும் ஏவுகணைகளை அனுப்பி வைக்கும் புண்ணிய கைங்கரியமும் மாஸ்கோவில் தொடக்கி வைக்கப்பட்டது. இதற்கெல்லாம் பார்வையாளராக நமது பிரதமரும் அங்கிருந்து பாரதத்தின் கௌரவத்தைக் கப்பலேற்றியிருக்கிறார்.

ஐம்பதாண்டுகளுக்குமுன் சமதர்மம் என்ற பெயரில் கம்யூனிஸ ஆட்சி ஏற்பட்ட போது உலகில் பலர் அது உண்மையாகவே சமத்துவத்தை நிலைநாட்டக்கூடும் என்றெண்ணி வரவேற்றதுண்டு. இவர்களில் முக்கியமாகக் குறிப்பிட வேண்டியவர் நேரு அவர்கள். தந்தையின் நினைவுக்கு மதிப்புத் தெரிவிப்பதாக எண்ணியே ஸ்ரீமதி இந்திரா இப்போது பிடிவாதமாகப் பொன்விழாவில் பங்கு கொண்டாரோ என்னவோ!

அதெப்படியாயினும் இந்த ஐம்பதாண்டுகளில் கம்யூனிஸ ஆட்சி எப்படி உருவாகியிருக்கிறது என்பதை எவ்வித மனச்சார்புகளும் இன்றிப் பார்ப்போருக்கெல்லாம் வேதனையே உண்டாகும். இன்று நாம் காண்கிற கம்யூனிஸ ஆட்சியின் முக்கியமான அம்சங்கள் என்ன?

அங்கு எதிர்க்கட்சிகளுக்கு இடமேயில்லை. கம்யூனிஸ்ட் கட்சிக்குள்ளேயே மாறுபட்ட கருத்துக்கள் தெரிவிப்பதற்கும் அநுமதிக்கப்படுவதில்லை. இதனால் நாடு முழுவதற்குமான கொள்கைகளையும் திட்டங்களையும் வகுத்து அமுலாக்கும் பொறுப்பு முழுவதும் தலைமையிலுள்ள ஒரு சிலரிடமோ அல்லது ஒரே ஒருவரிடமோதான் உள்ளது. அவர்கள் செய்வதற்கு மாறாக மக்கள் தங்கள் கருத்துக்களைச் சொல்ல இடமேயில்லை. மக்களின் சுதந்திரத்தையும், ஜனநாயகத்தையும் மதிக்கின்ற எவரேனும் இத்தகைய ஆட்சி முறையை வரவேற்க முடியுமா ?

கம்யூனிஸ ஆட்சியின் இன்னொரு முக்கியமான அம்சம் அங்கு மக்களின் பொருளாதார வாழ்வு முழுவதும் சர்க்காரால்தான் நிர்வகிக்கப்படுகிறது. ஆலைகள், கடைகள், நிலம் எல்லாம் சர்க்கார் உடைமையாக உள்ளன. இதனால் மக்களுக்கு அதிக அநுகூலம் விளைந்திருக்கிறதா என்று பார்த்தால், நியாய உணர்வு படைத்த எவரும், 'இல்லவே இல்லை' என்றுதான் பதில் தர வேண்டியிருக்கும். தகுதிகளுக்கு ஏற்ப ஊதியமும் லாபமும் கிடைக்காவிடில், எவரும் மனப்பூர்வமாக உழைத்துப் பூரண பலனை அளிக்க முடிவதில்லை என்பதை ருஷிய ஆட்சியாளரே நாளாவட்டத்தில் உணர்ந்து வந்திருக்கின்றனர். எனவே, யாவருக்கும் சம ஊதியம் என்ற கொள்கையைக் கைவிட்டனர். உற்பத்தித் துறையில் ஈடுபட்டுள்ளோருக்குச் சொந்தமான லாபம் இருந்தாலொழிய உற்பத்தி பெருக வாய்ப்பில்லை என்று ஓரளவு உணர்ந்து பலவிதமான ஊக்குதல்களை அளித்து வருகிறார்கள். மேலைநாடுகளைப் போல் மக்களுக்கு வேண்டிய பொருள்களைப் பெருமளவில் உற்பத்தி செய்யாமல்,

சர்க்காரின் அதிகாரத்தை அதிகரிக்க உதவும் திட்டங்களுக்கே பெருமளவில் செலவழிக்கும் நாடு ருஷியா. இப்படிப்பட்ட ஒரு நாட்டில் மக்களிடையே வாழ்நிலையில் தாரதம்மியங்களைச் சர்க்காரே அநுமதிக்க நேர்ந்திருப்பதால், அங்கு வெகு சொற்பமாக உற்பத்தியாகும் சுகபோக்கிய வஸ்துக்களை மிகச் சிலர்தான் அநுபவிக்க முடிகிறது. முடிவில், மேல்நாடுகளில் ஏழை — பணக்காரரிடையே உள்ள ஏற்றத்தாழ்வைவிட ருஷியாவில் அதிகமான ஏற்றத்தாழ்வுகள் உள்ளன.

விளைவைப் பார்த்தால் நமக்கே விதை நல்லதுதானா என்பது புரிந்து விடும். கம்யூனிஸ நாடுகளில் காணும் உற்பத்தி நிலையையும், மக்களின் வாழ்நிலையையும் பார்த்தாலே அந்த ஆட்சி முறை சுபிட்சத்துக்கு உதவாது, சுதந்திரத்துக்கும் உதவாது என்று நிச்சயமாகத் தெரியும். தனியாரின் சுதந்திரத் தொழிலோடு ஒப்பிடும்போது சர்க்காரின் ஏகபோக்கியத் தொழிலுரிமை தோல்வியே கண்டுள்ளது என்று ஐம்பதாண்டுக் கம்யூனிஸ ஆட்சி நிதர்சனமாக்கிவிட்டது. 'ஐரோப்பாவிலேயே சோவியத்தில்தான் மக்களின் வாழ்க்கைத்தரம் மிகவும் தாழ்வாக உள்ளது. அமெரிக்காவுடன் ஒப்பிட்டுப் பார்க்கத் தேவையே இல்லை' என்று பேரறிஞர்கள் கூறுகிறார்கள்.

அமெரிக்காவிலும் மற்ற கம்யூனிஸச் சார்பற்ற நாடுகளிலும் பிரச்னைகள் இல்லாமல் இல்லை. ஆனால் இந்தப் பிரச்னைகள் இந்நாடுகளில் வெளிப்படத் தெரிகின்றன. அவற்றைப் பற்றி வாதப் பிரதிவாதங்கள் வெளிப்பட நடைபெற அநுமதிக்கப்படுகிறது. கம்யூனிஸ நாடுகளின் நிலை இப்படிப்பட்டதல்ல. அங்கு பயங்கரப் பிரச்னைகள் பல இருப்பது மட்டுமின்றி, அவற்றைப் பற்றி விவாதிக்கவும், விமரிசிக்கவும் இடம் தராமல் அடக்கி வைக்கும் கொடுமையும் சேர்ந்திருக்கிறது. கடந்த பல மாதங்களாகச் சீனத்தில் மாவ் — சே — துங்குக்கும் அவரது முன்னாள் சகாக்களுக்குமிடையே மூண்டுள்ள போட்டியை ஓர் உள்நாட்டுப் போர் என்றே சொல்லிவிடலாம். இவ்வாறின்றி ருஷிய ஆட்சி பலம் வாய்ந்ததாகக் காணப்பட்டபோதிலும் அங்கு மக்களுக்கு அதிருப்தியே இல்லை என்று சொல்லிவிட முடியாது. அதிருப்தி உண்டு. ஆனால் அதை வெளிக்காட்ட அநுமதி கிடையாது. மக்களின் கருத்துக்களை அடிப்படையாகக் கொண்டு, தேர்தல் நடத்திச் சுமுகமான முறையில் ஆட்சி அதிகாரத்தை ஒரு கையிலிருந்து இன்னொரு கைக்கு மாற்றுவதென்பது கம்யூனிஸ நாடுகளில் நடக்க முடியாத ஒன்று. சட்டத்துக்குகந்த சமாதானச் சூழலில் அதிகாரம் மாற முடியாமலிருப்பது காரணமாகவே கொலை, போர் ஆகிய முறைகளில் ஆட்சித் தலைமை கவிழ்க்கப்படுகிறது. சதிகளும் சூழ்ச்சிகளும் அங்கு நடந்துகொண்டேயிருக்கின்றன.

சமீபத்தில் அற்புதமான பொதுத் தேர்தல் நடத்தி, அமைதிவழியில் ஆட்சியாளரின் கொட்டத்தை அடக்கிய பாரதம் இதையெல்லாம் இன்று சிந்தித்துப் பார்த்துப் பயன்பெற வேண்டும். எல்லாவற்றையும் சர்க்கார் வசமாக்கிக் கொள்ள வேண்டும் என்ற மோகத்தில் ஆழ்ந்துள்ள பாரத அரசாங்கத்தினர் ருஷியாவில் இதனால் ஏற்பட்டுள்ள பொருளாதாரச் சீர்குலைவை உன்னி உணர வேண்டும். கம்யூனிஸ்ட்களைத் தூக்கிவிட்டால் தங்கள் வாழ்நிலை வளம் பெறும் என்று மயங்கியுள்ள பாட்டாளி மக்கள், இறுதியில் அந்த ஆதிக்கத்தில் தொழிலாளரின் உலகியல் நலன்களும் பேணப்படுவதில்லை, அவர்களது சுதந்திர உரிமையும் காக்கப்படுவதில்லை என்பதை மனத்தில் கொள்ள வேண்டும்.

# மாறனுக்குப் பாராட்டு; மக்களுக்கும் பாராட்டு!

தென்சென்னைத் தேர்தலில் அமோக வெற்றிபெற்ற இளைஞர், கலைஞர் மாறன் அவர்களுக்கு நம் மனமார்ந்த நல்வாழ்த்துக்களை அளிக்கிறோம். தில்லி நாடாளு மன்றத்தில், ஹிந்தி ஏகாதிபத்தியத்தை எதிர்ப்பதற்கு இன்னுமோர் இளஞ் சிங்கம் செல்வதில் மகிழ்வெய்துகிறோம்.

வெற்றி பெற்ற மாறனைப் பாராட்டும்போதே அவருக்கு வெற்றி தந்த வாக்காளர்களையும் பாராட்டுகிறோம். தி.மு.க. ஆட்சியில் பாலும் தேனும் பெருக்கெடுத்து ஓடிவிடவில்லை; விலைவாசிகள் உச்சாணிக் கொம்பிலிருந்து இறங்கி வந்துவிடவில்லை; தொழில் துறையில் அசம்பாவிதங்கள் மலிந்து வருவது வாஸ்தவம். இவற்றையெல்லாம் தான் காங்கிரஸ் பிரசாரகர்கள் தடபுடலாக விளக்கி வந்தனர். அப்படியிருந்தும் எல்லா வாழ்மட்டங்களில் உள்ளவர்களும், எல்லா வகுப்பினரும் முன்னைவிடத் தி. மு. க.வுக்கு அதிக ஆதரவு தந்திருப்பதாகவே வாக்குப் பரிசீலனையிலிருந்து அநுமானிக்க முடிகிறது. தி.மு.க. இத்தகைய ஆதரவைப் பெறக் காரணம் என்ன? இப்போது காணும் பிரச்னைகளுக்கும் அலங்கோலங்களுக்கும் இத்தனை நாட்கள் ஆட்சி புரிந்த காங்கிரஸ்தான் காரணம் என்று மக்கள் உணர்ந்திருக்கின்றனர். முன்பு எதிராளிகள் செய்த தவறுகள் பல இப்போது பழுத்திருக்கின்றன. இதற்காகத் தி. மு. க.வைக் குறை கூறலாகாது என்று மக்கள் மேலான முடிவுசெய்திருக்கின்றனர். பழைய தவறுகளினால் விளைந்துள்ள சிக்கல்களையும் அலங்கோலங்களையும் எல்லாருக்கும் நியாயமான முறையில் தீர்க்க வேண்டுமென தி. மு. க. அரசு மனப்பூர்வமாக முயல்கிறது என்பதில் மக்கள் கொண்டுள்ள நம்பிக்கையையே தேர்தல் முடிவு நிரூபிக்கிறது. எல்லாவற்றுக்கும் மேலாக, ஹிந்தி சர்வாதிகாரத்தால் தமிழகம் பின்தங்கி நிற்காமல் காக்க வேண்டுமாயின் அதற்குத் தி.மு.க.வை ஆதரிப்பதுதான் வழி என்று மக்கள் தீர்மானித்து விட்டனர். அரசியலறிவிலும் பொது அறிவிலும் தேர்ந்த தென்சென்னையின் தீர்ப்பைத் தில்லி கவனித்துச் செயல்பட வேண்டும்.

# என்ன சேதி?

- அமெரிக்காவின் யோசனை
- பரிசுபெற்ற ஸ்டேஷன்கள்
- நேருஜியின் சகோதரி

அமெரிக்க அரசாங்கம், இந்தியாவில் உணவுமண்டலக் கட்டுப்பாடுகளை நீக்கிவிட யோசனை கூறியிருப்பதாக வதந்தி.

பீகாரில் கடும் உணவுப் பஞ்சம் ஏற்பட்டு மக்கள் அல்லலுறுகிறார்கள் என்பதைக் காட்டி இந்திய சர்க்கார் உலகெங்கிலும் உணவு தானிய உதவி நாடியது. அதே சமயத்தில் பாரதத்தின் மற்றொரு பகுதியான பஞ்சாபில் கோதுமை அபரிமிதமாக விளைந்து மண்டலக் கட்டுப்பாடு காரணமாகத் தானியம் அங்கேயே முடக்கப்பட்டுக் கிடந்தது. 'பீகார் மக்களின் பஞ்ச நிவாரணத்துக்கு அண்டையிலுள்ள பஞ்சாப் ராஜ்ய மக்களை விட அமெரிக்கர்களை அதிகமாக விளைவித்து அனுப்ப இந்திய அரசாங்கம் கோருகிறது' என்றுகூட அமெரிக்காவில் சொன்னார்கள்.

இதையெல்லாம் உத்தேசித்துத்தான் அமெரிக்க அரசாங்கம் இப்படியொரு யோசனை கூறியிருக்குமோ என்னவோ ?

"ஆயிரம் ஆனாலும் மாயவரம் ஆகாது!" என்ற பழமொழி மீண்டும் உறுதியாகியிருக்கிறது.

தென்னக ரயில்வேயில் அழகாகவும், சுத்தமாகவும் நிர்வகிக்கப்பட்டு வரும் பெரிய ரயில்வே நிலையங்களில் 'மாயூரம்' பரிசு பெற்றிருக்கிறது. இடைத்தர ரயில்வே நிலையங்களில் 'சேலம் டவுன்' ஸ்டேஷனும், சிறு ரயில்வே நிலையங்களில் 'மாரியம்மன் கோயில்' ஸ்டேஷனும் பரிசுகள் பெற்றிருக்கின்றன. நமது நாட்டில் பொது மக்கள், அதிலும் ஏழை மக்கள் புழங்கும் இடங்களைச் சுத்தமாக வைத்துக் கொள்வது எவ்வளவு சிரமம் என்று சொல்லத் தேவையில்லை. துப்புரவுப் பழக்கம் உண்டாக்கும் ஸ்தாபனங்களும் இல்லை. இந்நிலையில், பொதுமக்கள் புழங்கும் ரயில் நிலையங்கள் சுத்தமாகவும் அழகாகவும் வைத்து நிர்வகிக்கப்படுகின்றன என்றால் பரிசு தரத்தான் வேண்டும். இப்பரிசு மற்ற ஸ்டேஷன்களையும் சுத்தமாக வைத்துக் கொள்ள ஊக்கமளிக்கும் என்று நம்புகிறோம்.

ஸ்ரீமதி கிருஷ்ணா ஹத்திசிங் திடீரென்று காலமான செய்தி கேட்டுப் பெரும் துயரத்தில் ஆழ்ந்தோம். ஸ்ரீமதி கிருஷ்ணா, ஜவாஹர்லால் நேருஜியின் அருமைத் தங்கை. நல்ல படிப்பும் பண்பும் வாய்ந்தவர். சுவையாக எழுதும் ஆற்றல் பெற்றவர். சுதந்திரப் போராட்டத்தில் பங்குகொண்டு சிறை சென்றவர். சில சமயங்களில் நேருஜியின் காரியங்கள் நாட்டுக்கு உகந்தவையா என்று அவர் ஐயம் தெரிவித்ததுமுண்டு. ஸ்ரீமதி கிருஷ்ணா, ராஜா ஹத்திசிங் என்ற குஜராத்தியரைக் கலப்பு மணம் செய்து கொண்டவர். ஸ்ரீமதி கிருஷ்ணா சமீபத்தில் இங்கிலாந்துக்குச் சென்று ஒரு நண்பர் வீட்டில் தங்கி, இந்தியா திரும்பவிருந்ததற்கு முதல் நாள் இந்தத் துக்க சம்பவம் நேர்ந்து விட்டது. நேருஜியின் குடும்பத்தில் ஒரு துயரச் சம்பவம் நேரிட்டால் தேச மக்கள் ஒவ்வொருவர் வீட்டிலும் துயரம் நிகழ்ந்த உணர்ச்சி உண்டாகிறது !

## காமகோடியின் கருணை மொழி

இத்தனை யானை, குதிரை, பரிவாரங்கள் வைத்துக் கொண்டிருக்கிறோமே இவைகளையெல்லாம் விட்டுவிட்டுப் போய்விடலாமா என்று எனக்கு ஒரு சமயம் தோன்றிற்று. ஸ்ரீ சங்கர பகவத்பாதர்கள் இப்படித்தான் எப்போதும் பரிவாரங்களோடு இருந்தாரா என்று சந்தேகம் உண்டாயிற்று. அப்புறம் எனக்கே தெளிவுசெய்து கொண்டேன். ஹைகோர்ட்டில் முத்துஸ்வாமி அய்யர் சிலை இருக்கிறது. அர்த்தராத்திரியில் பார்த்தால்கூட அந்தப் பிம்பம் கவுன், டர்பன் எல்லாம் போட்டுக்கொண்டு தான் இருக்கிறது. ஆனால் முத்துஸ்வாமி ஐயர் அர்த்தராத்திரியில் இத்தனை உடுப்பா போட்டுக் கொண்டிருந்தார்? இல்லை. ஆனால் அவரது பெயரைக் காப்பதற்கு ஓர் அடையாளமாக இருக்கும் சிலைக்கு இந்த அலங்காரம் எப்போதும் தேவை.



ஸ்ரீ சங்கர பகவத்பாதர் ஸர்வக்ஞர். ஆனபடியால் எவ்வளவோ காரியங்கள் செய்தார். அவருக்குப் பரிவாரம் எப்போதும் தேவையில்லை. ஆனால் நாங்கள் அவரது பெயரை மாத்திரம் ரட்சிக்க ஓர் அடையாளமாக, உருவச் சின்னங்களைப் போல் வந்திருக்கிறோம். ஆசாரியாருடைய நினைவு எல்லாருக்கும் மனத்தில் இருக்கவும், இல்லாதவர்களுக்கு உண்டாக்கவும் பிரயத்தனம் செய்கிறோம். இதற்குப் பெரிய அடையாளங்கள், பரிவாரங்கள் வேண்டியிருக்கின்றன. அதனால் பல்லைக் கடித்துக் கொண்டு இவற்றோடு இருக்கத்தான் வேண்டுமென்று தெளிந்தேன்.





# ஆங்கிலமே அறிவுப் பாதை

இம்மாதம் முதல் வாரத்தில் சென்னை சர்வகலாசாலை நூற்றாண்டு நினைவு மணி மண்டபத்தில் ''நமது கல்வி முறையில் ஆங்கில மொழியின் இடம்'' பற்றி நடைபெற்ற மகாநாடு ஒரு மகத்தான சம்பவம். சென்னையில் இம்மாதிரி ஒரு மகாநாடு கூடியதேயில்லை. தமிழகத்திலிருந்தும் மற்ற ராஜ்யங்களிலிருந்தும் சுமார் 3500 மாணவ மாணவிகள், கல்லூரி ஆசிரியர்கள், கல்வித்துறை நிபுணர்கள், நிர்வாக அநுபவஸ்தர்கள், வர்த்தகர்கள், தொழிலதிபர்கள், அரசியலார்கள், சட்டசபை அங்கத்தினர்கள் முதலியோர் பிரதிநிதிகளாக வந்திருந்து இதில் கலந்து கொண்டனர். பழம் பெரும் அரசியல்வாதியும், தொழில் துறை பிரமுகருமான டாக்டர் ஏ. ராமசுவாமி முதலியார் தலைமையில் ராஜாஜி, சுப்ரீம் கோர்ட்டின் முன்னாள் பிரதம நீதிபதி கே. சுப்பாராவ், சி. டி. தேஷ்முக், பண்டித இருதயநாத் குன்ஸ்ரு, ஸ்ரீமதி கமலாதேவி சட்டோபாத்யாயா, ப்ராங்க் அந்தோனி, பி. கோதண்ட ராவ், பேராசிரியர் ரத்னசுவாமி முதலியோர் இம்மகாநாட்டில் சிறப்புரை ஆற்றினர்.

அரசியலும், உணர்ச்சி வேகமும், சுதேசியமும் ஒருங்கே கலந்து மொழி பற்றிய எந்த விவாதத்தையும் அமைதியுடன் நடத்த முடியாது என்ற சூழ்நிலையில் மகாநாடு கூடியிருந்தும், இங்கே நடைபெற்ற நடவடிக்கைகள் எல்லாமே கண்ணியத்துக்கும், அமைதிக்கும் எடுத்துக்காட்டாக இருந்தன. பேச்சுக்களில் வேகம் இருந்தது, ஆனால் துவேஷம் இல்லை. நியாயமான உறுதி இருந்தது, ஆனால் கோபம் இல்லை. பிரத்தியட்ச நோக்கு இருந்தது, வறட்டுக் கருத்து இல்லை. நல்லெண்ணமும் நம்பிக்கையும் இருந்தன, சந்தேகம் இல்லை. அமைதியும் ஆர்வமும் இருந்

மேலே : ராஜாஜி பேசுகிறார். நடுவே : திரு சுப்பாராவ்.
கீழே : ஏ. ஆர். முதலியார்




மகாநாட்டுக்கு வந்திருந்த சபையோரும், மேடையிலிருந்த தலைவர்களும்.

தன, பதற்றமும் கொந்தளிப்பும் இல்லை. கல்வித் துறையில் எல்லாக் கட்டங்களிலும் ஆங்கில மொழி அறிவைச் சீரான முறையில் போதிய அளவுக்கு வளர்த்தல்; சட்டக் கல்வி, விஞ்ஞானம், மருத்துவம், பொறி இயல், தொழில் துறை, நிர்வாகம், உயர் கல்வி போன்ற துறைகளில் ஆங்கிலத்தின் அவசியத்தை வலியுறுத்தல்; பிராந்திய மொழி அறிவைப் போதிய அளவுக்குப் பெருக்கிக் கல்வித் துறையில் அவைகளும் பெருமளவு பங்கு கொள்ளச் செய்வது; ஆங்கிலம், பிரதேச மொழி இரண்டிலும் அறிவு பெறுவதன் மூலம் மாணவர்கள் எல்லாத் துறைகளிலும் அறிவைப் பெருக்கிக் கொள்ள வகை செய்வது — இவை இம் மகாநாட்டின் குறிக்கோள்களாகும்.

இவற்றை விளக்கம் செய்து பேசுகையில் டாக்டர் ராமசுவாமி முதலியார் இரண்டு அம்சங்களை வலியுறுத்தினர். எந்த மொழியுடனும் ஆங்கில மொழிக்குச் சண்டையோ சச்சரவோ துவேஷமோ இல்லை. பிராந்திய மொழி, ஆங்கிலம் இரண்டுமே வளர வேண்டும் என்பதே எல்லாருடைய விருப்பமும். தமிழ் வளருவதற்குக்கூட ஆங்கில மொழியின் அறிவு உதவியாகவே இருக்கும். ஆகவே தமிழின் அவசியத்தையோ முக்கியத்துவத்தையோ குறைக்கவில்லை. ஆங்கில அறிவின் மூலம் உலக அறிவு, விஞ்ஞான அறிவு, பொது அறிவு எல்லாமே வளரும் என்பதற்காகவே அம் மொழி விரும்பப்படுகிறது. ஆகவே நாட்டின் நன்மைக்காக, மக்களின் நலனுக்காக, மாணவர்களின் வளர்ச்சிக்காகவே ஆங்கிலம் கோரப்படுகிறது என்று அழுத்தமாக, ஆணித்தரமாகத் தெரிவித்தார்.

ஐ. நா. சபையின் தலைவியாகவும், இந்தியத் தூதராகவும் இருந்த ஸ்ரீமதி விஜயலக்ஷ்மி பண்டிட் ஆங்கிலத்திலன்றி வேறு எந்த இந்திய மொழியிலாவது சொற்பொழிவுகள் நிகழ்த்தியிருந்தால், இந்தியாவின் பெருமையும் அந்தஸ்தும் இப்போதுள்ள நிலைமைக்கு உயர்ந்திருக்க முடியுமா என்று ராமசுவாமி முதலியார் மேடைமீது வீற்றிருந்த ஸ்ரீமதி விஜயலட்சுமி பண்டிட்டையே குறிப்பிட்டுப் பேசியது மறக்கவொண்ணாத நிகழ்ச்சி.

ஆங்கிலம் வேண்டும் என்று கோரும்போது தமக்குச் சுயநலம் ஒன்றும் இல்லை, சுயநலம் உண்டு என்றால் மண்டபத்தில் குழுமியுள்ள மாணவ மாணவிகளின் எதிர்கால வாழ்க்கை வளம்தான் தமது சுயநலம் என்றார் டாக்டர் ராமசுவாமி முதலியார்.

முன்னாள் பிரதம நீதிபதி திரு கே. சுப்பா ராவின் தொடக்க உரை ஓர் உயர்ந்த அறிவாராய்ச்சிக் கட்டுரையே ஆகும். ஆங்கிலத்தின் மேன்மை பற்றியும், அவசியம் பற்றியும் எதிர்ப்பு வாதங்களை யெல்லாம் ஒவ்வொன்றாகக் கண்டனம் செய்து தள்ளினர். மும்மொழித் திட்டம் பற்றியும், ஹிந்தி மொழியின் தகுதியின்மை பற்றியும், இணைப்பு மொழி குறித்தும் விரிவாக அலசித் தமது முடிவைத் தெளிவாகக் குறிப்பிட்டார். 'இப்போதுள்ள நிலைமையே நீடிக்கவேண்டும். ஹிந்தி நிர்வாக மொழியாக ஆனாலும் கூட ஆங்கிலமும் நிர்வாக மொழியாக உடன் இருத்தல் வேண்டும். ஆங்கிலமும் இந்திய தேசிய மொழியாக எட்டாவது ஷெட்யூலில் சேர்க்கப்பட வேண்டும். கல்லூரிகளில் பிரதேச மொழிகளின் ஸ்தானம் எப்படி இருப்பினும் ஆங்கிலம் போதனை மொழியாக இருப்பது தான் உத்தமம்' என்பதைத் தக்க காரணங்களுடன் விளக்கி வைத்தார்.

'150 ஆண்டுகளுக்கு முன்னால் ராஜாராம் மோகன்ராய் இந்தியப் பிள்ளைகளுக்கு ஆங்கிலம் சொல்லிக் கொடுக்க வேண்டுமென்று கேட்டபோது, முதலில் கிழக்கிந்தியக் கம்பெனிக்காரர்கள் ஆட்சேபித்தனராம். விடாமுயற்சியுடன் அவர்தாம் வற்புறுத்தி ஆங்கிலத்தைப் படிக்க ஏற்பாடுகள் செய்தாராம். இப்போது நமது நிலைமை ராஜாராம் மோகன்ராய் கோரியதுபோல் ' ஆங்கிலம் வேண்டும், ஆங்கிலம் வேண்டும் ' என்று கோரிப் பெறவேண்டிய அவல நிலையில் தான் இருக்கிறது' என்று ஹிந்திப் பிராந்தியத்திலிருந்து வந்துள்ள பண்டித குன்ஸ்ரு கூறியது குறிப்பிடத் தக்கதாகும்.

மைசூர் ராஜ்யத்திலிருந்து வந்திருந்த திரு பி. கோதண்டராவும், திரு வி. டி. ஸ்ரீநிவாஸனும் ''ஆங்கிலமே எப்போதும் வேண்டும்'' என்ற கோஷத்தை ஒரு மந்திரம் போலவே மகாநாட்டுக்கு அளித்தனர். ஆங்கிலத்தின் அவசியத்தைத் தமிழக அரசு உணர்ந்திருப்பது போல் மைசூர் ராஜ்ய

சர்க்கார் உணராதிருப்பது குறித்து அவர்கள் வருத்தம் தெரிவித்தனர். எவ்வளவு எதிர்ப்பு இருந்தாலும் ஆங்கிலத்தின் அவசியம்பற்றித் தாங்கள் தனி இயக்கமாகவேனும் பிரசாரம் செய்யத் தயார் என்று அவர்கள் உணர்ச்சியுடன் உறுதி கூறினர்.

மொழிப் பிரச்னையில் அனுபவம் முதிர்ந்த வீரர் பிராங்க் அந்தோனி. 'ஹிந்தியா, ஆங்கிலமா?' என்ற பிரச்னையின் எல்லா அம்சங்களையும் புள்ளி விவரங்களுடன் ஆராய்ந்துள்ளவர். ''ஹிந்தி ஒரு பிராந்திய மொழியே தவிர அகில இந்திய மொழி அல்ல. அதற்கு தேசிய அடிப்படையில் அந்தஸ்து அளிப்பது தகாது' என்று சந்தேகமின்றி அவர் விளக்கினர்.

ஹிந்தி ஆதிக்கம் பற்றி அனுபவ ரீதியில் எச்சரிக்கை விடுத்தவர் டாக்டர் சி. டி. தேஷ்முக். ''மொழி வெறியர்கள் பற்றி மிகுந்த எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். 'பிராந்திய மொழிகளே எல்லாப் படிவங்களிலும் போதனை மொழியாக இருத்தல் வேண்டும்; என்று சொல்லுவது ஆங்கில மொழியை அடியோடு விரட்டுவது, அல்லது அதைப் பட்டினி போட்டுக் கொல்லுவதற்குச் சமானம். இந்தியாவைப் பின்தங்கிய மத்திய கால நிலைக்குத் தள்ளப் பார்க்கும் இந்த ஏற்பாடு குறித்து எச்சரிக்கை மிகவும் அவசியம்'' என்றார் திரு தேஷ்முக். 'பிராந்திய மொழிக்காக வாதிப்பவர்கள் மொழி பற்றிய உணர்ச்சியை வளர்ப்பதிலேயே கவனம் செலுத்துகின்றனரே ஒழிய, அறிவை வளர்க்க முற்படவில்லை' என்ற குற்றச்சாட்டில் உண்மை இருக்கவே செய்கிறது' என்று அவர் குறிப்பிட்டதை அறிஞர்கள் பொதுவாக ஆமோதிப்பார்கள்.

மகாநாட்டுப் பேருரைகளில் ராஜாஜியின் அறைகூவலுக்குத் தனி இடம் இருந்தது. ஹிந்தி ஆதிக்கத்தை எப்படியும் எதிர்க்க வேண்டும். போரில் ஈடுபடுவதுபோல் மன உறுதியுடன் நீண்ட காலத்துக்கு எதிர்க்கத் தயாராக வேண்டும் என்று அவர் எடுத்தியம்பினர். அவர் குறிப்பிட்டது வாதப் போர், பிரசாரப் போர்தான். நேரடி நடவடிக்கை அல்ல. ஹிந்தி மொழி எப்போதாவது ஒரு காலத்தில் அகில இந்திய ரீதியில் வரத்தான் வேண்டும் என்பதைத் தர்க்க ரீதியில் ஒப்புக் கொண்டால் அதற்காக எப்போதாவது ஆரம்பம் செய்யத்தான் வேண்டும். ஏன் இப்போதிருந்தே ஆரம்பிக்கக் கூடாது என்ற வாதம் தவிர்க்க முடியாததாக ஆகிவிடும். ஆகவே ஹிந்திக்கு இடமே அளிக்கக் கூடாது என்ற அடிப்படையிலேயே ஆங்கிலத்துக்கு ஆதரவு தேடிக்கொள்ள வேண்டும் என்று அடித்துக் கூறி மகாநாட்டுக்கு ஊக்கமும் உற்சாகமும் ஊட்டினர். பிராந்தியமொழிகள் மீது மத்திய சர்க்காருக்கு ஏற்பட்டுள்ள புது மோகத்தைப் பற்றி மிகுந்த ஜாக்கிரதையுடனேயே இருக்க வேண்டும் என்று அவர் விடுத்த எச்சரிக்கையையும் மகாநாடு வரவேற்றது.

மகாநாட்டின் நடவடிக்கைகளில் ஒவ்வொரு துறைக்கும் ஒரு நிபுணர்கள் குழு அமைத்தது மிகுந்த பலனளித்தது. தனித் தனியாகப் பல குழுக்கள் அமைக்கப்பட்டன. விஞ்ஞானம், சட்டக் கல்வி, மருத்துவப் படிப்பு, பொறி இயல், தொழிற் கல்வி, வர்த்தகம், தொழில், வாணிபம் முதலிய துறைகளுக்காகவும் ஆசிரியர்கள், பேராசிரியர்கள், தலைமை ஆசிரியர்கள், பெற்றோர்கள், மாணவர்கள் இப்படித் தனி வகுப்புக்களுக்காகவும் குழுக்கள் அமைக்கப்பட்டு, ஒவ்வொன்றிலும், 40, 50 நிபுணர்கள் விவாதித்துத் தீர்மானங்கள் நிறைவேற்றினர். எல்லாமே ஏறக் குறைய ஏகோபித்த கருத்தாக இருந்தன. விஞ்ஞானக் கல்வியில் அறிவைப் பெருக்கிக் கொள்ள ஆங்கிலமே அவசியம் என்றனர். சட்டக் கல்வியிலோ, அர்த்த புஷ்டியுள்ள வார்த்தைகள் அதிகமாகத் தேவைப்படுவதால் ஆங்கிலம்தான் அருகதையுள்ளது என்றனர். தொழிலதிபர்கள், அயல் நாட்டினருடன் தொடர்புக்கும் கடிதப் போக்குவரத்துக்கும் ஆங்கில மொழியைத் தவிர வேறு எந்த மொழியும் கூடாது என்றனர். விண்வெளியுகத்தில் உள்ள நமக்குப் பொறியியல் துறையில் உலக அறிவுக் களஞ்சியம் எல்லாம் குறைவறக் கிட்ட வேண்டுமானுல் ஆங்கிலம் ஒன்றையே நம்ப வேண்டும் என்றனர். மாணவர்களோ எனில், 'அறிவை, எப்படியும் வளர்த்துக் கொள்ளவே வேண்டும். ஆங்கில மொழியே உலக மொழி. அதன் மூலமேதான் அறிவைப் பெருக்கிக் கொள்ள முடியும்' என்றார்கள்.

இவ்வாறாக, தனித்தனிக் குழுக்கள் செய்த தீர்மானங்களை இணைத்து, அவைகளுடைய அபிப்பிராயங்களுக்கு மதிப்புக் கொடுத்து மகாநாடு நிறைவேற்றிய பொதுத் தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது. ''ஆங்கிலத்தின் அவசியம் எல்லாக் குழுக்களாலும் உணர்த்தப்பட்டிருப்பதால், அதனுடைய தரத்தைப் பள்ளிகளிலும், உயர் படிப்புக்களிலும் குறையாது பாதுகாத்து வளப்படுத்துமாறும், தேசிய அளவில் மட்டுமின்றி சர்வதேச ரீதியிலும் கருத்துப் பரிவர்த்தனை மொழியாக ஆங்கிலம் இருக்குமாறும் பார்த்துக்கொள்ளச் சட்ட மன்றங்களையும், பல்கலைக் கழகங்களையும் இம் மகாநாடு கேட்டுக் கொள்ளுகிறது. இம் மொழியின் உபயோகத்தை விரிவுபடுத்தவும், பலப்படுத்தவும் எல்லாவித முயற்சிகளும் எடுக்கப்பட வேண்டும். நவீன கால அறிவை வளர்ப்பதற்கு உகந்த முறையில் பிராந்திய மொழிகளை வளப்படுத்தி, ஆங்கில மொழியில் நடைபெறும் போதனைக்கு உதவக் கூடிய வகையில் வளர்க்க வேண்டும் என்றும் மகாநாடு கோருகிறது'' என்பதே தீர்மானம்.

பூரண திருப்தியுடன் முடிந்த இம்மகாநாட்டு வேலை இத்துடன் முடிந்துவிடவில்லை; இனிமேல்தான் ஆரம்பமாகப் போகிறது என்று டாக்டர் ஏ. ராமசுவாமி முதலியார் சொன்னபோது, இம்மகாநாட்டைப் போல இதர மகாநாடுகள் நாட்டின் மற்றப் பிராந்தியங்களிலும் நடைபெறத் திட்டங்கள் இருக்கின்றன என்பது சூசகமாகத் தெரிந்தது. இதுவல்லவோ மகாநாடு என்ற அளவுக்கு ஏற்பாடுகளைச் செய்திருந்தவர்களை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.

— எம். எஸ். சிவஸ்வாமி




உபகிரகங்களில் அணுகுண்டுகளை ஏற்றிச் செல்லும் பயமுறுத்தலை ருஷியா தொடங்கியிருக்கிறதல்லவா? இதுவரை அணுகுண்டுகளைக் கண்டத்திலிருந்து கண்டம் ஏவி வந்ததையும் மிஞ்சிவிட்டது இந்த ஏற்பாடு. எனவே, இப்புது அணு ஆயுதப் பிரயோகத்தைப் பழைய அணு ஆயுதங்களிலிருந்து வித்தியாசப்படுத்திக் காட்டுவதற்காகப் பழைய அணு ஆயுதங்களை 'ஏற்கனவே ஒப்புக் கொள்ளப்பட்ட அணு ஆயுதங்கள்' என்று ராய்ட்டர் செய்தி ஸ்தாபனம் குறிப்பிட்டிருக்கிறது. நீண்டகால சம்பிரதாயத்தினால் போரில் ஒப்புக் கொள்ளப்பட்ட கருவிகளையும், புதிதாக வழக்கத்துக்கு வந்துள்ள கருவிகளையும் பாகுபடுத்துவது உண்டு. அந்த ரீதியில் பயங்கரமான அணுகுண்டுகூட இப்போது ஒப்புக் கொள்ளப்பட்ட சம்பிரதாய ஆயுதமாகிவிட்டது! அணுகுண்டுகளை ஒழிப்பதில் உலகம் செயலாற்றாமல் அசிரத்தையுடன் இருந்ததால் வந்த விளைவு இது.

ருஷியா புதிதாக விண்வெளியிலிருந்து குண்டுகளை எய்வது பற்றி அமெரிக்கா பலத்த கண்டனம் தெரிவிக்கவில்லை. ஏனெனில், அப்படிக் கண்டித்துவிட்டால் நாளைக்கு அமெரிக்கர்களும் இதேபோல் வானவெளியிலிருந்து குண்டு எய்ய முடியாதல்லவா? ருஷியாவுடன் இத்துறையில் தானும் போட்டி போட வேண்டும் என்பதாலேயே இவ்விஷயத்தை அமெரிக்கா கண்டிக்காதிருப்பதாகத் தோன்றுகிறது. சர்வநாசத்தை நோக்கி நாளுக்கு நாள் வேகத்துடன் முன்னேறி வரும் போக்கைத் தடுத்து நிறுத்த வேண்டுமாயின், வல்லரசுகளின் அணுஆயுதப் போட்டிக்கு மக்கள் இன்றைவிட மிகத் தீவிரமாக எதிர்ப்புத் தெரிவிக்க வேண்டும்.

'சம்பிரதாயமாக ஒப்புக் கொள்ளப்பட்ட ஆயுதங்கள்' என்னும் போது பழைய நினைவுகள் உண்டாகின்றன. ஐம்பதாண்டுகளுக்குமுன்பு இந்தியாவின் நாகரிகமற்ற காட்டுக் குடிகளை அடக்க நேரிடும் போது மட்டுமே பிரிட்டிஷ் ஆட்சியில் வான மார்க்கமாகக் குண்டு வீசப்பட்டது. ஆனால் இரண்டாவது மகாயுத்தத்தில் இவ்விதம் விமானம் மூலம் குண்டு வீசுவது எல்லாச் சூழ்நிலைகளிலுமே ஒப்புக் கொள்ளப்பட்ட சம்பிரதாயமாகி விட்டது. ராணுவ வீரர்களா, பொதுமக்களா என்று பாராமல் நாகரிகம் மிக்க பெரிய நகர்களின் மீதும், குழந்தைகள், ஸ்திரீகள் உள்பட எவர் மீதும் விமானத்திலிருந்து குண்டுவீசுவது சகஜமாகிவிட்டது. இதேபோல், இது நாள் வரை சம்பிரதாய யுத்தத்தில் ஒப்புக் கொள்ளப்படாமலிருந்த அணுகுண்டுகளும், புதிய ஏவுகணை வந்ததினால் ஒப்புக்கொள்ளப்பட்டன போலும்!

⁂

சில பத்திரிகைகள் தென்சென்னைத் தேர்தல் முடிவைக் குறைத்து மதிப்பிட்ட போதிலும் அது அகில இந்திய முக்கியத்துவம் வாய்ந்ததாகும். தி. மு. க. வேட்பாளர் திரு மாறன் காங்கிரஸ் வேட்பாளரைவிட ஒரு லட்சத்துக்கு அதிகமான வாக்குகள் பெற்று வென்றிருக்கிறார். இடைத் தேர்தல் ஒன்றில் அறுபத்தெட்டு சதவீத வாக்காளர்கள் வாக்குப் பதிவு செய்திருப்பது குறிப்பிடத்தக்கது. திரு காமராஜ் காங்கிரஸுக்காகத் தீவிரப் பிரசாரம் செய்தார். எனவே, தேர்தல் முடிவு காங்கிரஸுக்கு ஒரு பெரும் தோல்வி என்பது மட்டுமின்றி, காங்கிரஸ் அக்கிராசனருக்குச் சொந்த முறையில் ஒரு தோல்வியாகக் கருதப்படுகிறது. முன்பு பொதுத் தேர்தலின் போது இத்தொகுதியில் திரு அண்ணாதுரை ஐந்தில் மூன்று பங்கு வாக்குகளும், காங்கிரஸ் வேட்பாளர் ஐந்தில் இரண்டு பங்கு வாக்குகளும் பெற்றிருந்தனர். இப்போது காங்கிரஸ் அதைவிடப் படு மோசமான நிலையை அடைந்துள்ளது. மொத்தத்தில் சுமார் மூன்றில் ஒரு பங்கு வோட்டுக்களே அதற்குக் கிடைத்துள்ளது.

⁂

சர்க்காரிடம் மக்களுக்கு இருக்க வேண்டிய நம்பிக்கை குறைந்து கொண்டே வருகிறது என்பதை அக்கட்சி நலனே சிந்தனையாகவுள்ள தலைவர்களும் காணாமல் இருக்க முடியாது. இதற்கு விமோசனமாக ஒரு வழி காண்பதில் அவர்கள் முயலக் கூடாதா? மக்களின் நம்பிக்கையைப் பெற்றுள்ள ஒரு மந்திரி சபை அமைவதே வழி என்று அவர்கள் உணரமாட்டார்களா? தேர்தலில் தோல்வி அடையும்வரையில் காங்கிரஸ் காத்துக்கொண்டிருக்க வேண்டுமா? தாமாகவே ராஜிநாமா செய்வதன் மூலம் காங்கிரஸார் தேசத்துக்குச் சேவை புரியக்கூடாதா? இந்த மகா யாகம் செய்வதற்குக் காங்கிரஸ் சங்கற்பம் கொள்ளுமாயின், அதன் தவறுகளையெல்லாம் மன்னித்துவிடலாம்.

⁂

நான் என் சுயசரிதத்தை எழுதவேண்டும் என்று இன்னமும் மக்கள் கேட்டபடிதான் இருக்கிறார்கள். ஆனால் முன்பே நான் சுயசரிதைகளைப் பற்றிச் சொன்ன கருத்தைத்தான் இன்னமும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கிறேன். சுயசரிதைகளைப் பற்றி தார்ன்டன் வைல்டர் சொன்ன கருத்துதான் அது. அவர் சொல்வார்: ''சுயசரிதை என்பது ஐம்பமும், சுய மன்னிப்பும், வார்த்தை ஜாலமும் நிறைந்த ஓர் உலகில் உண்மைச் சாரத்தை அற்பமாகக் காண்பது தான்.''




# "லேடி லாவெண்டர்" தற்பெருமையிலே திளைப்பவள்

மிக, மிக ஆடம்பரமான டால்க்...''லேடி லாவெண்டர்''. பட்டுப் போன்ற மென்மை. பிற வகைகளை மிஞ்சும் வைபோகத் தன்மை. நறுமணமோ நேர்த்தியான பிரெஞ்ச் லாவெண்டர். உங்கள் உல்லாச மன நிலைக்கென்றே விசேஷமாக உருவாக்கப்பட்ட உயர்ந்த டால்க்-* * * * * * * * * * * * * * * * * *

கூடவே கிடைக்கிறது: ''ஒன் டச் ஆப் பாரிஸ்'' தனிப்பட்ட ஆன் பிரெஞ்ச் நறுமணம் கொண்டது. * * * * * * * * * * * * * * * * * * *

ஆன் பிரெஞ்சு டால்க்–சுகந்தம் போல் உங்கள் மேனி மீது உறவாடும் டால்க்



26-L- TAM

ரிஜிஸ்டர்டு யூஸர்: ஜெப்ரி மானேர்ஸ் அண்டு கம்பெனி லிமிடெட்

# விளையாட்டு மன்னருக்கு விருது

இன்று டென்னிஸ் என்றவுடன் நம் கண்முன் நிற்கும் கிருஷ்ணன், பள்ளியில் பயின்ற நாட்களில் அப்போது பிரபலமா யிருந்த கால்பந்து, கிரிக்கெட் விளையாட்டுக்களில்தான் ஈடுபட்டிருந்தார். கிருஷ்ணன் கால்பந்தாட்ட மைதானத்தில் ஆடும்போது அவரை டென்னிஸ் மைதானத்துக்கு இழுத்து வந்து ஆட வைப்பார் அவரது தந்தை ஸ்ரீ ராமநாதன். இன்று தந்தையின் மனமும் தாய்நாட்டின் மனமும் குளிர, கிருஷ்ணன் டென்னிஸ் மன்னராக விளங்குகிறார்.

கிருஷ்ணன் பிறந்தது 1937ம் ஆண்டு, ஏப்ரல் 11ந் தேதி, நாகர்கோயிலை அடுத்த பூதபாண்டியில். மாம்பலம் ராமகிருஷ்ண மிஷன் உயர்நிலைப் பள்ளியில் ஐந்தாம், ஆறும் படிவங்களில் பயின்றபோதே கிருஷ்ணனின் டென்னிஸ் சோபிக்கத் தொடங்கியது. உயர்நிலைப் பள்ளி மாணவனாக இருக்கும்போதே அவர் கல்லூரி மாணவர்களுக்கான ஸ்டான்லி கோப்பையைப் பெற்றது அனைவரையும் மூக்கின் மேல் விரலை வைக்கச் செய்தது.

அதிகாலையில் டென்னிஸ் ஆடுவதற்கு முன்னால் தந்தை ராமநாதனும் தனயன் கிருஷ்ணனும் ஆட்ட மைதானத்தில் ஓடுவதைக் கண்டு பலர் ஆச்சரியமுற்றிருப்பார்கள். டென்னிஸ் ஆட்டத்தில் திறமையோடு உடல் வலிவும் முக்கியம் என்ற உணர்வைத் தந்தை விளையும் பயிரிலேயே பயிற்றுவித்தார்.

அந்தக்காலத்தில் கிருஷ்ணனின் ஆட்டத்தைக் கண்டு என். எஸ். கிருஷ்ணனும் மதுரமும் டென்னிஸ் ஆடக் கிளம்பினார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!

லயோலா கல்லூரியில் பொருளாதாரத்தில் ஆனர்ஸ் பட்டம் பெற்ற கிருஷ்ணன் திருவிதாங்கூரில் நடைபெற்ற இளைஞர் டென்னிஸ் போட்டியில் வென்று தம் வெற்றி வாழ்வுக்கு அஸ்திவாரமிட்டார். 1952ம் ஆண்டிலே சென்னையின் முதல்தர ஆட்டக்காரராகப் புகழ் பெற்றார். 1953ல் ஆஸ்திரேலிய ஆட்டக்காரர் ஜேக் ஆர்க்கின்ஸ்டலைத் தோல்வியடையச் செய்தார். மைசூர் மகாராஜா கிருஷ்ணனின் ஆட்டத் திறமையைக் கண்டு வியந்து அவர் விம்பிள்டன் போட்டியில் கலந்து கொள்ள வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுத்தார். எந்தப் போட்டியானாலும் அதிலே இடம் பெற்று, தேசிய சாம்பியனாகி, ஆசிய வெற்றி வீரராகிப் புகழேணியில் ஏறினார். நெயில்ஸன், ஓல்மடோ, பிரேஸர், செக்ஸியாஸ் முதலிய ஜாம்பவான்களை வெற்றி கொண்டவர் ஸ்ரீ கிருஷ்ணன்.

விளையாட்டின் ஓர் அங்கம் பண்பு. டென்னிஸ் மைதானத்தில் பண்பாட்டோடு நடந்து கொள்வதற்காகச் சிகாகோவில் அவருக்குப் பரிசு வழங்கிக் கௌரவித்திருக்கிறார்கள். சென்னையில் கிருஷ்ணனுக்கும் மெக்ஸிகோ ஆட்டக்காரரான ஒருவருக்கும் நடந்த போட்டியில் கிருஷ்ணன் வெற்றிமுக வாய்ப்பில் இருந்த போது, நடுவர் தவறுதலாகச் சொல்லி எதிர்க்குப் பாயின்ட் கொடுத்து விட்டார். அதைக் கிருஷ்ணன் பெருந்தன்மையுடன் ஏற்று ஆட்டத்தைத் தொடர்ந்து முடித்து, விளையாட்டுத் தோல்வியையும் பண்பாட்டின் வெற்றியாக்கிய பெருமை என்றும் நினைவில் இருக்கும்.

புதுதில்லியில் நடைபெற்ற டேவிஸ் கோப்பைப் பந்தயத்தில் தாம் ஆடாமல் முகர்ஜிக்கும் பிரேம்ஜித்லாலுக்கும் விட்டுக் கொடுத்துப் பெருந்தன்மையுடன் இரட்டையர் ஆட்டத்தில் கிருஷ்ணன் பங்கு கொண்டதும் இப்பண்பின் பிரதிபலிப்பே.

கிருஷ்ணனின் ஆட்டச் சிறப்பைக் கண்டு 'டென்னிஸ் ஆட்டத்தைத் தொழிலாக்கியுள்ள மன்னர்' ஜாக் கிராமர் அவருக்குப் பெரும் நிதி வழங்கி அவரை 'புரொஃபஷனலா'க்க முயன்றார் என்றால் அவரது சிறப்புக்கு வேறு அத்தாட்சி வேண்டுமா?

அமெரிக்காவில் அனைத்துலக விளையாட்டுப் போட்டிப் பரிசுகளில் சிறப்பு மிக்க ஒன்றான ஹெல்ம்ஸ் கேடயத்தைச் சமீபத்தில் நேரு ஸ்டேடியத்தில் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு வழங்கிப் பாராட்டினார்கள். அமெரிக்கத் தகவல் அதிகாரி எடி மேர்பீல்டு கிருஷ்ணனிடம் கேடயம் வழங்கினார். இந்தியா சுதந்திரம் அடைந்த பிறகு இருபது ஆண்டுகளில் மூன்று பேர்களுக்கே ஹெல்ம்ஸ் கேடயம் வழங்கப்பட்டுள்ளது. ஆண்டுதோறும் ஹெல்ம்ஸ் கேடயம் வழங்கும் ஹெல்ம்ஸ் உடற்பயிற்சிக் கழகம் லாப நோக்கமற்ற ஒரு பரோபகார நிலையமாகும். டென்னிஸ் கிருஷ்ணனை ஹெல்ம்ஸ் கேடயத்துடன் இந்த இதழ் அட்டைப் படத்தில் பார்க்கிறோம். இந்தியாவுக்குப் புகழ் தேடிக் கொடுக்கும் டென்னிஸ் விளையாட்டு மன்னர் ஸ்ரீ கிருஷ்ணனுக்கு நல்வாழ்த்துக் கூறுகிறோம். - குண்டுமணி



# படியப்படிய வாரிய கேசம், பளபளப்பான கேசம் !

# டாடா *நறுமண* கேஸ்டர் ஹேர் ஆயில் !

*நாள்முழுதும் கேசம் கலையாமலிருக்கச் செய்கிறது*

கேசப் பராமரிப்பு ஓர் அரிய கலை. அழகாய் அமைந்த கேசம் அலாதி தன்னம்பிக்கையை அளிக்கிறது. நாள் முழுதும் கலையாமல் இன் மணத்துடனும் ஆரோக்கியமுடனும் உங்கள் கேசம் மிளிர டாடா நறுமண கேஸ்டர் ஹேர் ஆயில் உபயோகியுங்கள்... எழில்மிகு தோற்றம் பெற

*டாடா கேஸ்டர் ஹேர் ஆயில்...*

கண் கவரும் புதிய புட்டி 3 சைஸ்களிலே கிடைக்கிறது




ஆரோக்கியமான படிந்த கேசத்துக்காக.



## விவசாயி

சமீபத்தில்தான் தமிழ்ப் பத்திரிகை ஒன்றில் வந்திருந்தது ஒரு செய்தி. அயல் நாட்டுப் பெண்மணி ஒருவரிடம் தமிழ்ப் படங்களைப் பற்றிக் கேட்ட கேள்விக்கு அவர் கூறிய பதில் இது: "(கேவலமான முறையில்) உடலோடு உடல் ஒட்டி உரசி நிற்க, ஆணும் பெண்ணும் கட்டி உருண்டு தழுவிக்கொண்டு காதல் புரிகிறார்கள் திரையில். ஆனால் முத்தக் காட்சிகளை மட்டும் நீங்கள் எதிர்க்கிறீர்களாமே? வேடிக்கைதான்!"

வேடிக்கைதான். அந்த அம்மையாரைக் கொண்டுபோய் 'விவசாயி' நடக்கும் கொட்டகைக்குள் உட்கார வைத்தால் நமக்குப் புத்தி வரும்படி நிறையச் சொல்லுவார்!

அது சரி, தணிக்கைக் குழு என்று ஒன்று இருக்கிறதா? அது நம் தமிழ் நாட்டில் செயல்படத்தான் செய்கிறதா? 'வயது வந்தவர்களுக்கு மட்டும்' என்று சில படங்களுக்கு 'ஏ' முத்திரை குத்தி அனுப்பும் அதிகாரமும் தங்களுக்கு உண்டு என்பதாவது குழுவுக்குத் தெரியுமா? 'ஏ' குத்து வாங்குவதற்கு ஏற்றதொரு படத்தை எல்லாரும் பார்க்க அனுமதித்துள்ள அநியாயத்தை என்னவென்று சொல்வது? தணிக்கைக் குழுவினர் விவசாயியில் வரும் கண்ணருவிக் காட்சிகளைக் காணும்போது மயங்கி யிருந்தனரா?

விவசாயியின் கதையமைப்பைப் பற்றியோ, நடிப்பைப் பற்றியோ விமர்சிக்கத் தேவையில்லாவிட்டாலும் ஒன்றே ஒன்றை மட்டும் சொல்லத்தான் வேண்டும். தமிழ்ப் படங்களில் வில்லனாக, வீரனாக, ஆண்மகனாகத் தலைநிமிர்ந்து நிற்கும் அசோகன் இதில் தம் வெற்றுடம்பைக் காட்ட வெட்கப்பட்டு, இரு கைகளாலும் உடலை மூடிக்கொண்டு, கூசிக் குறுகி நடிக்கும் அழகைப் பார்க்கும்போது, 'வெட்கப்பட வேண்டியவர்களெல்லாம் வெட்கப்படவில்லையே, நாணத்துடன் நடிக்க வேண்டியவர்களிடம் அது இல்லையே! கூச்சப்பட வேண்டியவர்களிடம் அவ்வுணர்ச்சியே இல்லாதபோது அதைக் கண்டு எனக்கே பொறுக்கவில்லை. நாமாவது இப்படி நடிக்கலாமே என்று நடிக்கிறேன்' என்று அவர் சொல்லாமல் சொல்வது போலிருக்கிறது.

'விவசாயி' — விரசமான காட்சிகளைத் தொகுத்து மக்களை ஈர்ப்பது என்ற விளைச்சலை எதிர்பார்க்கும் ஒரு...

## நான்

பதினைந்து வயதில் காணமற் போன சிறுவனைப் பதினைந்து ஆண்டுகளுக்குப் பிறகு கண்டுபிடிப்பதென்றால் சும்மாவா?

யார் ஜமீந்தாரின் உண்மையான மகன் என்று தீர்மானிக்க முடியாமல் குழப்பம் விளைவித்திருக்கிறார் கதாசிரியர். அதுதான் திரைக்கதையின் சஸ்பென்ஸ்; உயிர்நாடி.

ஜமீந்தார் மகனைக் காதலித்த தன் தங்கைக்காக உண்மையைக் கண்டுபிடிக்க ஜமீந்தார் மகனாக நடிக்கிறான் ஒருவன். இந்தச் சிக்கலில் துப்புத் துலக்குவதற்காக சி. ஐ. டியும் ஜமீந்தார் மகனாக நடிக்கிறார்.

இவர்களுக்கிடையில் உண்மையான சின்ன ராஜா அகப்பட்டுக் கொண்டு திணறுகிறான்.

மோசம் செய்யும் நோக்கத்துடன் சின்ன ஜமீந்தாராக நடிக்கும் வில்லன் மனோகர் அபாரமாக நடிக்கிறார். அவரது பார்வையும், நடையுமே போதும்.

போலீஸ் சி. ஐ. டி.யாக வரும் நாகேஷ் நன்றாக நடிக்கக் கேட்பானேன்? அவரே சி. ஐ. டி.யின் தாயாராகவும் நடிக்கிறார். ஸ்திரீ வேஷம் பொருத்தமா யிருக்கிறது.

கொள்ளைக் கூட்டத் தலைவனாக வரும் அசோகன் அநாயாசமாக நடித்திருக்கிறார். அவரது சிரிப்பும், குழைவான பேச்சும் தனிப் பாணியில் அமைந்துவிட்டன.

ரவிசந்திரனுக்கு நல்ல சான்ஸ். ஜயலலிதாவின் காதல் அவருக்குத்தானே கிட்டுகிறது! அவர் நடித்தால் என்ன, நடிக்காவிட்டால் என்ன!

ஜயலலிதா கண்ணைக் கவரும் 'சிக்' உடையில் தோன்றிப் பலவித ஆட்டங்கள் ஆடி, நீச்சல் அடித்துக் காதல் புரிகிறார்.

மனோகரின் தாயாராக வரும் ஸ்ரீ ரஞ்சனி நன்றாய் நடித்து மன நிறைவைத் தருகிறார். மகனையே கடைசியில் துப்பாக்கிக் குண்டுக்கு இரையாக்கிக் கதையை முடித்து வைக்கிறார்.

குட்டி பத்மினியின் நடிப்பு பாராட்டுக்குரியது; சாகஸமாக நடித்திருக்கிறாள்.

கதை, வசனம் எழுதியவர் டி. என். பாலு. விறுவிறுப்பாக எழுதியிருக்கிறார்.

ராமண்ணா டைரக்ஷன் நன்றாயிருக்கிறது.

பாடல்களை இல்லாமல் இருந்திருந்தால் இந்தப் படம் தீபாவளிப் படங்களுக்குள் சிறப்பு இடம் பெற்றிருக்கும்.

வண்ணப் படமான "நான்" புதுமைகள் நிறைந்த பொழுதுபோக்குப் படம்.



## அத்தியாயம் 16

மகாதேவனிடமிருந்து தப்பிக் காரில் செல்லும் போது சித்ரா நன்றி கலந்த பார்வை ஒன்றை ரவி மீது கடாட்சித்தாள். ''ரவி! நீங்க இவ்வளவு தைரியசாலியா யிருப்பீங்கன்னு நான் நினைக்கவே யில்லே. அவங்க மூணு பேர் உங்களைத் தாக்கியும் தைரியமா எதிர்த்து நின்னீங்களே!''

''இந்தமாதிரியெல்லாம் நடக்கும்னு நான் எதிர்பார்க்கவேயில்லே. உங்களை எலியட்ஸ் பீச்சுக்குக் கூப்பிட்டதுக்கு என்னை மன்னிச்சுடுங்க!''

''அதனுலென்ன? பரவாயில்லே!''

''சே! சே! தப்பு! இதுக்கெல்லாம் காரணம் நான்தான்.''

''நீங்க எப்படிக் காரணமாக முடியும்? எங்கப்பாவைப் பற்றி ஏதோ ஒரு விவரம் சொல்லப் போறதாக் கூப்பிட்டீங்க. இந்த மாதிரியெல்லாம் இங்கே கலாட்டா நடக்கப் போகுதுன்னு உங்களுக்குத்தெரியுமா என்ன?''

''சித்ரா! உங்ககிட்டே நான் உண்மையை மறைக்க விரும்பவில்லே. அந்த ரௌடிங்களை அங்கே வரச் சொல்லி ஏற்பாடு செய்ததே நான்தான்!''

''என்னது நீங்களா?'' என்று கேட்டுச் சித்ரா காரை நிறுத்தினுள்.

''ஆமாம்.'' — ரவி தொடர்ந்தான். ''காலக்ஷேபத்திலே நீங்க என் மேலே கோவிச்சுக்கிட்டுப் போயிட்டீங்க. எப்படியாவது உங்களுக்கு என்னைப் பற்றி நல்ல அபிப்பிராயம் ஏற்படும்படியா செய்துடணும்னு யோசிச்சேன். ஒரு பிளான் போட்டேன்'' என்று ஆரம்பித்து ரவி தன்னுடைய திட்டத்தை விவரித்தான்.

''அப்போ.... நீங்க சொன்னபடி வந்த ஆளா இருந்தால் உங்களை ஏன் அவன் அப்படி அடிச்சான்?''

''கேளுங்க! அவன் என்னைப் புடிச்சுக் குலுக்கின போது நான் அவன் காதோட, 'மகாதேவா! போறும், ஓடிப் போயிடு'ன்னேன். அவன் உடனே என் காதுலே 'நான் நகையைக் கெழட்டாமப் போறதில்லே. நீ தப்பிச்சுக்கணும்னு ஓடிப் பூடு! இந்தப் பொம்பளையை நாங்க கவனிச்சுக்கறோம்'ன்னுன்! அப்பத்தான் அவன் என்னையே ஏமாத்திப்புட்டான்னு எனக்குப் புரிஞ்சுது!''

''அவன்தான் உங்களை ஓடிப் போயிடச் சொன்னுனே. நீங்க போயிருந்தால் வீணு அடிபட்டிருக்க வேண்டாமே?''

''என்னது! உங்களை ஓர் ஆபத்துலே மாட்டி விட்டுட்டு நான் ஓடிப் போயிட




'சோ'





றதா! என்னே என்ன அவ்வளவு கேவலமாகவா நினேச்சுக்கிட்டீங்க !''

''இருந்தாலும் ரொம்ப தைரிய மாத்தான் நீங்க சண்டை போட்டீங்க. ரவி எதுக்காக இந்த மாதிரி வம்புலே மாட்டிக்கிட்டீங்க?''

''உங்களுக்காகத்தான். எப்படியவது உங்க அன்பைக் கவர்ந்துடணும்னுதான் தீர்மானம் செய்துட்டேன். அதுக்காக எப்பேர்ப்பட்ட ஆபத்தையும் ஏத்துக்க நான் தயார். இன்னும் உங்களுக்கு என் மேலே அன்பு வரலேன்னாலும் பரவாயில்லே. என்னுடைய அடுத்த திட்டம் தயாரா இருக்குது.''

''என்ன அது?'' என்ருள் சித்ரா.

''உங்களேப் பிடிச்சு ஓர் ஆற்றிலேயோ, குளத்துலேயோ தள்ளிப்பிட வேண்டியது. அப்புறம் நானும் தண்ணியிலே விழுந்து உங்களேக் காப்பாத்த வேண்டியது.''

''உங்களுக்கு நீச்சல் தெரியுமா?''

''தெரியாது!''

''அய்யய்யோ ! அப்போ இரண்டு பேரும் குளோஸ் ஆயிட்டா ?''

''பரவாயில்லே ! இல்லறத்தில் ஒன்ருசேர முடியா விட்டாலும், இறப்பிலே ஒன்று சேர்ந்து இறைவனடி நாடுவோம் !''





''ரவி! நான் உண்மையைச் சொல்கிறேன். நான் எத்தனையோ பேரை 'மீட்' பண்ணியிருக்கேன். ஆனால் உங்களை மாதிரி ஒருத்தரை நான் பார்த்ததேயில்லே. உங்க வெகுளித்தனம், எதையும் வெளிப்படையாப் பேசறது, உங்க துணிச்சல், உங்க பிடிவாதம்கூட எனக்குப் பிடிச்சிருக்குது. தவிர நீங்க எனக்கு முறைக்காரர் வேறே! ஆனால் நீங்க சில சமயம் பேசறது பொய்யா நிஜமான்னே புரிய மாட்டேங்குது..... எங்கப்பாவுக்கு ரேஸ் பைத்தியத்தை நிறுத்தறேன்னு சொல்லிட்டு அதை அதிகமாக்கிக்கிட்டே போறீங்க.''

''சித்ரா! அந்த ஒரு விஷயத்திலே நான் உனக்குக் கொடுத்த வாக்குறுதியை நிச்சயமா காப்பாத்துவேன்! நீ என்னை நம்பு!'' என்றான் ரவி. அவன் தன்னிடம் ஏகவசனத்தில் பேசியதைக் கண்டு சித்ரா சற்றே வியப்போடு அவனை நோக்கினாள்.

''என்ன பார்க்கிறே?'' என்றான் ரவி.

''இனிமேல் எதுக்கு நீங்க, வாங்க! அதெல்லாம். நீதான் என்னைக் காதலிக்கிறதா ஒப்புத்துக்கிட்டியே?''

''நான் எங்கே அந்த மாதிரி சொன்னேன்?''

''அவ்வளவு வெளிப் படையாச் சொல்ல உனக்கு வெக்கம்! அதனாலே நைஸாச் சொன்னே.''

''நான் இன்னும் சொல்லலே.''

''சரி! மனசுக்குள்ளே நினைச்சே!''

''இல்லே!''

''இதோ பார், சித்ரா. வீண் பிடிவாதம் பிடிச்சுப் பிரயோசனம் இல்லே. எனக்கு நீதான். உனக்கு நான்தான்.''



''அப்படி ஒண்ணும் நிச்சயமாச் சொல்ல முடியாது.''

''சரி! இன்னும் கொஞ்ச நாள் காத்துக்கிட்டிருந்தால் உன் மனசு மாறும்'' என்று ரவி நம்பிக்கையோடு கூறினான்.

''ரவி ! எங்கப்பாவைப் பற்றி ஏதோ சொல்லணும்னீங்க. அதைச் சொல்லவே இல்லையே !''

''உங்களை இனிமேல் பார்க்கவே முடியாதோன்னு நினைச்சு அதைச் சொல்லணும்னு இருந்தேன். இப்பத்தான் உங்களுக்கு என் மேலே இருந்த கோபம் போயிட்டுதே. அதனாலே அந்த விஷயத்தைச் சொல்ல இப்ப ஒண்ணும் அவசரமில்லே!''

''அது என்ன விஷயம்னு சொல்லுங்க ரவி. ப்ளீஸ் !''

''சொல்ல வேண்டாம்னு தீர்மானம் பண்ணி விட்டேன்.''

''இந்த மாதிரி எதையோ மறைச்சுப் பேசறபோதெல்லாம்தான் உங்கமேலே எனக்குச் சந்தேகம் வருது.''

''எப்படியிருந்தாலும் நான் இப்ப அதைச் சொல்லப் போறதில்லே.''

''அப்படி ஏன் அதை மறைக்கிறீங்க ?''

''வேறே விஷயத்தைப் பற்றிப் பேசுவமா ? பிறகு உங்க வீட்டுக்கு வரேன்! குட்நைட்!'' என்று கூறி ரவி காரை விட்டு இறங்கி வேகமாக நடந்தான்.

சித்ரா காரை 'ஸ்டார்ட்' செய்தாள். ஒவ்வொரு முறை ஒவ்வொரு மாதிரி நடந்து கொள்ளும் ரவியைப் புரிந்து கொள்ள முடியாமல் தவித்த அவள் மனம், அவளது இஷ்ட தெய்வமான விநாயகரை நாடியது. ''விக்னேசுவரா ! நீதான் இதற்கெல்லாம் ஒரு வழி காட்ட வேண்டும்'' என்று பிரார்த்தித்தாள் சித்ரா. விநாயகர் பக்தையின் குரல் கேட்டுப் புன்முறுவல் பூத்தார். ''ரவி! சனீசுவரன் கோயிலைச் சுற்றிச் சுற்றி வந்தாய்! எனக்கு மகிழ்ச்சியே! ஆனால் எனக்கு நன்றி தெரிவிக்க மறந்தார் சனீசுவரன். என்னை அலட்சியப்படுத்திய சனீசுவரனின் பக்தனுகிய நீ என் பக்தையை அடைவது அவ்வளவு சுலபமல்ல !'' என்று கூறிக் கொண்டார் விக்னேசுவரர்.

மிருகவைத்தியர் வந்து அசோக்கைப் பரிசோதித்து மருந்து எழுதிக் கொடுத்து ஒரு வாரம் கழிந்தது. முத்து தினம் தவறாமல் வைத்தியரிடம் சென்று, அசோக்கின் நிலை பற்றிக் கூறி அவர் எழுதித் தரும் மருந்துகளைக் கொடுத்து வந்தான். அசோக்கின் உடல் நலம் மெள்ள, மெள்ளத் தேறியது. ''அதற்கொன்றும் வியாதி இல்லை. ஒரு ஜெனரல் வீக்னஸ்'' என்றார் மிருக வைத்தியர்.

அசோக்கின் உடல் நலம் தேறியவுடன் ராஜரத்தினத்துக்கு முத்துவின் மீது அலாதிப் பிரியம் வந்துவிட்டது. அவனுக்குப் பீஸ் கொடுக்க அவர் முன்வந்தபோது முத்து மறுத்துவிட்டான். ''ஸார்! உங்க குடும்பத்திலே ஒருத்தனாப் பழகி விட்டேன். எனக்கு இதெல்லாம் வேண்டாம்'' என்று அடித்துக் கூறி விட்டான். உடனே ராஜரத்தினம், ''டாக்டர் ! எங்க குடும்பத்திலே நானும் கிரிஜாவும்தான். அதுக்கப்புறம் அசோக். இப்ப நீங்க!'' என்று மெய்ம்மறந்து கூறினார். அசோக் குணமாகி விட்டதால் டாக்டர் தங்கள் வீட்டை விட்டு வெளியேற வேண்டியிருக்குமோ என்று கவலைப்பட்ட கிரிஜா தந்தையிடம், ''அப்பா! இன்னும் கொஞ்ச நாட்கள் டாக்டர் இங்கேயே இருக்கட்டும். இல்லாட்டி அசோக்குக்குத் திரும்ப ஏதாவது வந்துட்டா ரொம்பக் கஷ்டமாப் போயிடும்'' என்று கூற ராஜரத்தினமும் சம்மதித்து விட்டார்.

எதிராஜ் சிங்காரத்தோடு சேர்ந்து நெக்லேஸைத் தேடிக் கொண்டே இருந்தான்.

அன்று முத்து வழக்கம்போல் ராஜரத்தினம் வீட்டுக்குள் நுழைந்தான். கிரிஜா அவனுக்காகக் காத்துக் கொண்டிருந்தாள். முத்து வந்தவுடன் ''டாக்டர்! நீங்க எனக்கு ஓர் உதவி செய்யணுமே!'' என்று கெஞ்சினாள்.

''உனக்குச் செய்யாத உதவி நான் யாருக்குச் செய்யப் போகிறேன், சொல்லு!'' என்று அசடு வழிந்தான் முத்து.

கிரிஜா அர்த்தமில்லாமல் சிரித்தாள். முத்து அந்தச் சிரிப்பைப் பார்த்தும்கூடப் பொறுமையோடு உட்கார்ந்திருந்தான். கிரிஜா தன் கழுத்தை வெட்டி அவனை மீண்டும் ஒரு முறை பார்த்து, உடனே மறுபுறம் திரும்பிச் சிரித்தாள். அவன் இன்னமும் பொறுமையாக இருந்தான். கிரிஜா சிறு குழந்தை போல் அவனைப் பார்த்து, ''ஊக்கும்'' என்று செல்லமாகச் சிணுங்கினாள். முத்து பொறுமையை இழக்கவில்லை. இவர்கள் இருவருடைய இந்த நடத்தையிலிருந்தே, அவர்கள் இருவருக்குள் காதல் நன்றாக மலர்ந்து விட்டது என்பது நிதரிசனமாகத் தெரிந்தது.

''டாக்டர்...!'' என்று ஆரம்பித்தாள் கிரிஜா. முத்து குறுக்கிட்டான்: ''என்ன இது, டாக்டர் டாக்டர்னு!''

''வேறே எப்படிக் கூப்பிடறது? நீங்க டாக்டர்தானே ?'' என்று கூறி நகைத்தாள் கிரிஜா. உடனே முத்துவும் பெரிய ஹாஸ்யத்தைக் கண்டு

அதி முக்கியமான
ஒன்றைக்
காணவில்லையே:

# நெரோலாக் பெயிண்டு

ஒயிலான அந்த அலங்கார சாதனங்களுக்காக ஊரெல்லாம் துருவித் தேடினீர்களா? மணியான அக் கலைப் பொருள்களுக்காக மணிக் கணக்கில் கடைகளை அலசினீர்கள் அல்லவா? ஆனால் அதி முக்கியமான ஒன்றை மறந்தீர்களே: நெரோலாக் தயாரிப்பான தரமான பெயிண்டு. தேர்ந்தெடுக்கப் பல்வேறு வகையான கொள்ளையழகுச் சாயல்கள். உங்கள் அலங்கரிப்புக்கு நிறைவுக் களையூட்டி இல்லத்தை எழிலோவியமாக்குங்களேன். புதுமைக் களையோடு மேலும் பல்லாண்டு விளங்கச் செய்யுங்கள்.

இந்தியாவிலேயே முதன்முதலாக அக்ரிலிக் அடிப்படை கொண்ட எமல்ஷன் பெயிண்டை அறிமுகப்படுத்தியவர்கள்.




**குட்லாஸ் நெரோலாக் பெயிண்டுகள்—வாங்கக் கிடைப்பவற்றுள் மிகச் சிறந்தவை**

INTER PUB/GNP/2 TAM

**ட்லாஸ் நெரோலாக் பெயிண்ட்ஸ் பிரைவேட் லிமிடெட், 29, பெரியண்ண மேஸ்திரி தெரு, சென்னை-1**

விட்டவன்போல் பலமாகச் சிரித்தான். என்ன செய்வது? குடி போதையில் இருப்பவனுக்கும் காதலில் இருப்பவனுக்கும் அதிக வித்தியாசம் இல்லை. அந்த இரண்டு நிலைகளில் இருக்கும்போது மனிதர்கள் பழகும் விதத்தைச் சுயநினைவோடு இருக்கும்போது அவர்களே நினைத்துப் பார்த்தால் வெட்கித் தலை குனிவார்கள் என்பது நிச்சயம். பிறகு நினைத்து வெட்கப்பட வேண்டிய காரியங்களை மனிதர்கள் ஏன் செய்கிறார்கள் என்பது அர்த்தமில்லாத கேள்வி. மனித ஜன்மமே அப்படிப்பட்ட குணநிசயம் படைத்ததுதான். குழந்தையைப் பெற்ற பெற்றோர்கள் அந்தக் குழந்தையை நினைத்துப் பிற்காலத்தில் வெட்கப்பட வேண்டியிருக்கிறது. பிறந்துவிட்ட குழந்தையோ வயது வந்த பிறகு தனது பெற்றோர்களை நினைத்து வெட்கப்படுகிறது. நாள் முழுதும் செய்யும் காரியங்களை நினைத்துப் படுக்கப் போகும்போது வெட்கப்படுகிறோம். படுக்கையில் கண்ட கனவுகளை நினைத்து விடியற்காலையில் வெட்கப்படுகிறோம். தான் வாழ்ந்த வாழ்க்கையை நினைத்து இறக்கும்போது மனிதன் வெட்கப்படுகிறான். அவன் இறந்தும் தாங்கள் வாழ்வதை நினைத்து மற்றவர்கள் வெட்கப்படுகிறார்கள். இறந்தவனோ தான் பேயாக நிற்கும் நிலையில் இடுகாட்டில் தன் பிரேதத்தைச் சுற்றித் தனக்குத் தீங்கிழைத்தவர்களே கூடி நின்று கதறி அழுது வெளி வேஷம் போடும் காட்சியைக் கண்டு அவர்களுக்காக வெட்கப்படுகிறான். இப்படி மனிதனின் சரித்திரமே வெட்கத்தின் அடிப்படையில் ஆரம்பித்து வெட்கப்பட்டே முடிகிறது. இப்படியிருக்க மனிதனைப் போய், 'வெட்கங் கெட்ட ஜன்மம்' என்று சிலர் சொல்லுகிறார்களே, இதை எப்படி ஒப்புக் கொள்ள முடியும்? இப்படிப்பட்ட மனித குலத்தைப் படைத்த இறைவன் அல்லவா வெட்கங் கெட்டவன்!

கிரிஜாவிடம், ''என்ன செய்யணும், சொல்லு!'' என்றான் முத்து. அவனுக்கு இப்போது அசாத்தியத் துணிச்சல் வந்து விட்டது. அசடுகளுக்குத் துணிச்சல் வராது. அப்படி வந்து விட்டால் அது அசட்டுத் துணிச்சலாகப் பீறிட்டுக் கொண்டு வரும். ''கம் ஆன் கிரிஜா! சொல்லு!'' என்றான் முத்து.

''என் சிநேகிதிங்க அஞ்சு ஆறு பேர் இப்போ இங்கே வருவாங்க. அவங்களுக்கெல்லாம் நீங்கதான் உதவி செய்யணும்'' என்று கூறினாள் கிரிஜா.

''என்ன உதவி?''



## எலி சங்கியை

உலகில் உள்ள சில நாடுகளில் இன்று எலிகளின் எண்ணிக்கை ஜனத்தொகையைவிட அதிகமாக இருக்கிறது. 50 கோடி மக்கள் வாழும் இந்தியாவில் அதைப் போல் பன்மடங்கு எலிகள் உள்ளன. ஆனால் 18 கோடி மக்கள் வாழும் அமெரிக்காவில் இருக்கும் எலிகள் 10 கோடிதான். பொதுவாக நோக்கும்பொழுது உலகில் நிபுணர்கள் கருத்துப்படி ஒரு மனிதனுக்கு ஓர் எலி விதம் இருக்கிறது. எலிகள் அதிகமாகக் குட்டி போடும் தன்மை உடையன. சராசரி வருடத்துக்கு மூன்று முதல் ஆறு தடவைகள் குட்டி போடுகின்றன. ஒவ்வொரு தடவைக்கும் சுமார் பத்து குட்டிகள் போடுகின்றன. பிறக்கின்ற எல்லாக் குட்டிகளும் பிழைத்துக் கொள்கின்றன என்று கொண்டால் ஒரு ஜோடி எலி வருடத்துக்கு மூன்று முறை விதம் சில வருடங்களில் லட்சக்கணக்காகப் பெருகிவிடும். ஆனால் அதிர்ஷ்டவசமாக, இயற்கை நியதியாலும் மனிதனின் இடைவிடாத முயற்சியாலும் எலிகளின் எண்ணிக்கை இதற்கு மிகவும் குறைந்தே காணப்படுகின்றன.

வாழ வேண்டும் என்ற துடிப்பு அதிகமாக இருக்கின்றபோதிலும் ஓர் எலியின் சராசரி ஆயும் காலம் ஆறு மாதமே. தனி எலிகள் 3 முதல் 5 ஆண்டுகள் வாழ்வதுண்டு. எலிகள் அதிகமாகப் பூனை, நாய் போன்ற பிராணிகளாலும், பொறி, விஷ உணவு ஆகியவைகளாலும் கொல்லப்படுகின்றன. எலிகள் உணவு தேடும்போது தங்கள் இடத்தைவிட்டு 190 மீட்டருக்கு மேல் செல்வது கிடையாது.

---

''ஒன்னுமில்லே. அவங்கவங்க வீட்டிலேயிருந்து அவங்கவங்க நாயோடே வருவாங்க. அதுக்கெல்லாம் ஒரு 'மெடிக்கல் செக் அப்' பண்ணிவிடுங்க. போதும்.''

திடுக்கிட்டான் முத்து. ''என்னது?''

''டைனி, டைகர், சீஸர், ஜிம்மி, ஜாக்கி, ரோஸி, ப்ருட்டஸ், ராணி, ராஜா இத்தனைக்கும் நீங்க சும்மா உடம்பு சரியா இருக்குதான்னு 'டெஸ்ட்' பண்ணாப் போதும்.''

''இத்தனையும் நாய் பேரா? மொத்தம் ஒம்பதாறது.''

''ஒம்பது பேர்தானே வரப் போகிறாங்க!''

''அந்தச் சிநேகிதிங்க பேர் என்ன?''

''டைனி வளர்க்கிறவ, டைகர் வளர்க்கிறவ, சீஸர் வளர்க்கிறவ...''

''இரு..... இரு.... அவங்க பேர் என்ன?''

''அது சரியா ஞாபகமில்லே. நாங்கள் ஒருத்தரை ஒருத்தர் பெயர் சொல்லிக் கூப்பிட்டுப் பழக்கமில்லே.''

''மரியாதையாக் கூப்பிட்டுக்குவீங்களா ?''

''ஆமாம்! 'டீ. இவளே இவளே'ன்னு தான் கூப்பிடுவோம்!''

''நல்லாயிருக்குது. ஆமாம். ஊரிலே இருக்கிற நாய்களுக்கெல்லாம் வைத்தியம் பார்க்கத்தான் நான் வந்திருக்கிறேனா ?''

''ப்ளீஸ்! எனக்காக இந்த உதவியைச் செய்ய மாட்டீங்களா?''

''சரி! சரி! என் தலைவிதி !'' என்று முத்து நொந்துகொள்ளவும், வாசலில், 'லொள், லொள், வௌவ், வௌவ்!' என்று பல நாய்கள் தங்கள் வருகையை அறிவிக்கவும் சரியாக இருந்தது.

இரண்டு நிமிடங்களுக்குள் திக்பிரமை பிடித்து நின்ற முத்துவின் எதிரில், ஒன்பது நாரீமணிகளும், ஒன்பது நாய்களும் பிரசன்னமாயின. வந்தவர்களிடம் கிரிஜா, ''இவர்தான் டாக்டர்!'' என்று கூறியது தான் தாமதம், அவரவர்கள் நாய்களை அவிழ்த்துவிட, அவை முத்துவை நோக்கிப் பாய்ந்தன.

முத்து பதறிப் போய் ஒரு சோபாவின் மீது ஏறி நின்றான். நாய்கள் சுற்றி வட்டமிட்டன. ஓரிரண்டு நாய்கள், தாங்களும் சோபாவின்மீது ஏறிக் கொண்டன. முத்து பயந்து குதித்தான். கால் இடறிக் கீழே விழ, நாய்ப் படை அவன் மீது தாவியது. ஒரு நாயின் வால் அவன் முகத்தில் விளையாட, அவன் ஆத்திரத்தோடு அந்த வாலைப் பிடித்து இழுத்தான். ''அய்யய்யோ!'' என்று அலறினாள் ஒரு பெண். அப்போதுதான் அது நாயின் வால் அல்ல, ஒரு பெண்ணின் ஜடை தான் அம்மாதிரி இருந்தது என்பதை உணர்ந்தான் முத்து. அது புரிந்தவுடன் தன் பலத்தை யெல்லாம் வைத்து அதை மீண்டும் இழுத்தான். ''டாக்டர் ! டாக்டர் !'' என்று அலறினாள் அந்த நாரீமணி. இந்த அமளிதுமளியைக் கேட்டு அசோக் ஓடி வந்தது. தனக்குப் போட்டியாக ஒன்பது நாய்களைப் பார்த்துப் பொறுக்க முடியாமல், அவைகளைப் பார்த்துக் குரைத்தது. அந்த ஒன்பது நாய்களும் அசோக்கின் பக்கம் திரும்பி அதன் மீது பாய்ந்தன. ''நன்றாக வேண்டும் இந்த அசோக்குக்கு!'' என்று உள்ளம் பூரித்தான் முத்து.

அசோக்கின் நிலையைக் கண்ட கிரிஜா, ''அய்யய்யோ ! அசோக் ! அசோக் !'' என்று உரக்கக் கூவிப் பதறினாள்.

ஒவ்வொரு பெண்ணும் ''டைனி, டைகர்!'' என்று முறையே அவரவர்கள் வீட்டு நாயை அழைக்க, அந்தந்த நாய்கள் சற்றே நின்று உறுமி, பின் வாங்கி, தங்கள் தங்கள் எஜமானிகளை நோக்கி நடந்தன. ஓர் உலக மகாயுத்தம் ஆரம்பத்திலேயே தடைப்பட்டு நின்றது போலிருந்தது.

கிரிஜாவுக்குக் கோபம் பொத்துக்கொண்டு வந்தது. ''உங்களுக்கெல்லாம் உதவி செய்ய நினைச்சது என் தப்பு. என் அசோக் கிட்டேயே உங்க நாய்ங்க சண்டைக்கு வருதுங்களே. கொஞ்சம்கூட மரியாதையே இல்லே. பேசாமல் நாளையிலேயிருந்து ஒருத்தொருத்தரா நாயைக் கொண்டாங்க. டாக்டர் 'டெஸ்ட்' பண்ணுவாரு !'' என்றாள்.

நாய்களும், சிநேகிதிகளும் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு வெளியேறினார்கள். முத்துவும் கிரிஜாவும் உள்ளே சென்றார்கள். 'எப்பேர்ப்பட்ட ஆபத்திலிருந்து தப்பினோம்' என்று நினைத்துச் சந்தோஷப்பட்டுக் கொண்டே உள்ளே சென்றான் முத்து.

எப்பேர்ப்பட்ட ஆபத்து தனக்குக் காத்திருக்கிறது என்பதை அவன் அப்போது உணரவில்லை. முத்துவின் தகப்பனார், அறுவடையெல்லாம் முடித்துக் கொண்டு முத்துவைப் பார்ப்பது என்று தாம் செய்த தீர்மானத்தின் படி சென்னைக்குப் புறப்பட்டார். சென்னைக்கு வந்தவர் ரவியின் வீட்டுக்கு அவன் கொடுத்த விலாசத்தின் படி தேடிப் பார்க்க, முத்துவும் ரவியும் தாங்கள் எங்கு போயிருக்கிறோம் என்று மற்றவர்களுக்குத் தெரிவதற்காக எழுதி வைத்திருக்கும் காகிதத்தைப் பார்த்து, ராஜரத்தினம் வீட்டில் முத்து இருப்பதை அறிந்தார். விசாரித்து அறிந்து, அந்த வீட்டையும் கண்டுபிடித்து, இப்போது ராஜரத்தினத்தின் வீட்டு வாசல் அருகில் வந்து நின்றார். வீட்டையும் தோட்டத்தையும் ஒரு கண்ணோட்டம் விட்டு, 'பையன் நல்ல பெரிய இடத்தில் வேலைக்குச் சேர்ந்திருக்கிறான். இப்போதே உள்ளே போய் அவனைப் பார்த்து விடுவது' என்று முடிவு செய்து, வீட்டுக் காம்பௌண்டினுள் நுழைந்தார். தன் உருமாற்றம், பெயர் மாற்றம் முதலியவற்றை அறியாத தனது தந்தை இப்போது தன்னைத் தேடி வருவதை அறியாத முத்து உள்ளே நிம்மதியாகக் கவலையற்று, ராஜரத்தினத்திடமும், கிரிஜாவிடமும் பேசிக் கொண்டிருந்தான். (தொடரும்)

# நீர்மேல் கோலம்



நீர்க் கோலம் போடாதே என்று பெரியவர்கள் எச்சரிப்பது வழக்கம். ஆனால், நீரின் மீது சித்திரங்கள் வரையத் தடையேதுமில்லை. இது முடியாத செயல் என்பதுதான் காரணமோ?

நீரின் மீதாவது, சித்திரம் எழுவதாவது, என்று வியக்கிறீர்களா? உங்கள் வியப்பை அதிகமாக்கும், இவ்விதம் நீர்மீது வரைபவர் எழுபத்தைந்து வயதான மூதாட்டி ஒருவர் என்பது. மாதுஸ்ரீ வாலாம்பாள் அம்மையார் ஒரு தாம்பாளத்தில் நீரை ஊற்றி அதன் மீது தீட்டும் வண்ண ஓவியங்கள் பிரமிப்பூட்டுபவையே! வெண்ணெய்த் தாழியுடன் கண்ணன், வேலும் கையுமாக நிற்கும் வேலன், திருமாலின் பத்து அவதாரங்கள் — இவை யெல்லாம் வாலாம்பாள் பாட்டியின் கை வண்ணத்தில் உயிரோவியங்களாகக் காட்சியளிக்கின்றன. பாட்டிக்கு ஒரு கண் பார்வை சற்றே குன்றியிருக்கிறது. எனினும் கை நிதானத்திலேயே மிக லாகவமாக நீர்மேல் சித்திரங்கள் வரையும் பாட்டியின் திறமைக்கு இணையில்லை.

"குருவாயூரில் நடந்த பத்மினியின் கல்யாணத்துக்குப் போயிருந்தேன். பத்மினிதான் என்னை அழைத்துச் சென்றது. அங்கு ஒரு வெள்ளித் தாம்பாளத்தில் நீரை நிரப்பி அதிலே 'தசாவதாரம்' வரைந்தேன். 'பாட்டி ஓவியம் தீட்டிய வெள்ளித் தட்டு பாட்டிக்கேதான்!' என்று வெள்ளித் தட்டை என்னிடம் பத்மினி கொடுத்தபோது எனக்கு ஒன்றுமே புரியவில்லை. குருவாயூரப்பன் கோவிலுக்கே அந்த வெள்ளித் தாம்பாளத்தை என்னுடைய காணிக்கையாகச் சமர்ப்பித்து விட்டேன்!" என்று கூறும் பாட்டியின் தெய்வ பக்தியையும் பெருந்தன்மையையும் என்னென்பது!

பாட்டியின் ஓவியம் தீட்டும் 'டெக்னிக்'கில் ரகசியம் ஏதும் இல்லை. சலனமற்ற நீரிலே, கோலம் வரைவது போல் இரு விரல்களால் ஒருவித வெள்ளைப் பொடியைத் தூவி விடுகிறார். நீரின் மேல் மட்டம் வெண்மையாகியதும், வண்ணப் பொடிகளால் சித்திரம் வரைந்து விடுகிறார். ஏதாவதொரு வண்ணக் கோட்டினை அழிக்க வேண்டுமானால் அதன் மீது சித்திரக்காரர் வெள்ளை பூசுவது போல் வெள்ளைப் பொடியைத் தூவி மறைத்து விடுகிறார். நீர்மேல் வரைந்த இவ்வண்ண ஓவியங்கள் இரண்டு நாட்களுக்குக் கலையாமல் இருக்கின்றன. ஆனால் ஒரு விஷயம். சித்திரத்துக்குக் காற்றுத்தான் விரோதி. மேலே மின்விசிறி சுழன்றால் சித்திரம் கலைந்து விடும். இல்லாவிடில் பல நாட்கள் நிலைத்து நிற்கும். அதாவது 'நீர்மேல் எழுத்துக்கு நேர்' என்ற ஆன்றோர் வாக்கையே பொய்ப்பித்து விடும்.

காஞ்சியிலே ஸ்ரீ காமகோடி பீடாதிபதியவர்கள் முன்னிலையில் வாலாம்பாள் பாட்டி வரைந்த வண்ணச் சித்திரங்களைக் கண்டு மகிழ்ந்து சுவாமிகள் ஒரு தங்கக் காசு வழங்கினார்களாம். இதைக் கூறும்போது பாட்டிக்குத்தான் எத்தனை பெருமிதம்!

சித்திரம் தீட்டிப் பெயரோ பொருளோ ஈட்டும் ஆசை பாட்டிக்கு இல்லை. ஜகச் சித்திரம் தீட்டுபவனுக்குத் தமது சித்திரத்தால் கைங்கரியம் செய்த பக்குவ உள்ளம் படைத்தவர் பாட்டி. திருவல்லிக்கேணி எல்லையம்மன் கோயிலுக்கு இவ்விதச் சித்திரங்கள் வரைந்து நிதி திரட்டித் திருவாசி கைங்கரியம் செய்திருக்கிறார் பாட்டி.

இந்த நாட்களில் புராதனக் கலை, குடும்பக் கலை என்றெல்லாம் கொண்டாடிப் பலர் பல கலைகளை மேற்கொள்வதைக் காண்கிறோம். ஆனால் நீர்க்கோலமெனும் பாட்டியின் கலையைப் பாராட்டியவர் பலர் இருந்தபோதிலும் இதுவரையில் பாட்டியிடம் யாருமே அதனைப் பயின்றதில்லை. அவரது பெண்கூட இந்தக் கலையில் தேர்ச்சி பெறவில்லை! இந்தக் குறை விரைவிலேயே நீங்க வேண்டுமென விரும்புவோம்.

'பாணன்'



தெய்வம் என்று ஒன்று கிடையாது; எல்லாம் இயற்கையின் செயல்தான் என்கின்றனர் பகுத்தறிவு வாதிகள். இயற்கையாகவே உண்டாகும் சாளக்கிராமத்தில் தெய்வ மூர்த்தங்கள் பலவற்றின் சின்னங்கள் அமைந்து, பல்வேறு பயன்களை அளிக்கும் அதிசயத்தை என்னென்பது?

—ஆசிரியர்

# சாளக்கிராமம்

## வி. கோபாலன்

எங்கும் நிறைந்திருக்கும் தத்துவப் பொருளை, சத்திய வடிவை மண்ணுயிர்கள் புறக் கண்களால் காண்பதற்கு இரண்டு வழிகள் இருக்கின்றன. பரம் பொருளை ஞான தரிசனம் செய்த திருவருட் செல்வர்கள் அவனது உருவத்தைக் கண்டு அதனை ஆலயங்களில் அமர்த்தி யிருக்கின்றனர். கருணை வடிவினனான அத் தேவன் பூ உலகில் தானே ஒரு குறிப்பிட்ட வடிவம் கொண்டும் அருள் புரிகிறான். அவ்வடிவங்களில் ஒன்றே சாளக்கிராமம் எனப்படுகிறது.

சாளக்கிராமம் என்பது கண்டகி நதி தீரத்தில் சிறப்பாகக் கிடைக்கும் ஒருவகைக் கற்களாகும். சிப்பியைப் போன்ற ஒரு ஜந்துவின் கூட்டினுள் நீண்டகாலமாக இறுகிய மண்ணே சாளக்கிராமக் கல்லாகிறது. இக்கற்களில் மகாவிஷ்ணுவின் பலவித அம்சங்களும், வடிவங்களும் காணப்படுவதால் இவை திருமால் வழிபாட்டுக்குச் சிறப்பாக உரியவை எனப்படுகின்றன. சாளக்கிராம வழிபாடு மிகப் பழமையான ஒரு சமய மரபாகும். பழமையானது என்பதாலே பெருமை மிக்கது; புகழும் மிக்கது.

திருமால் சாளக்கிராம வடிவம் பெற்ற வரலாற்றைத் தேவி பாகவதம், பிரம்ம வைவர்த்த புராணம் ஆகிய நூல்கள் கூறுகின்றன.

கண்ணன் மீது துளசிக்குக் கட்டுக்கடங்காத காதல். கோலோகத்தில் ராதாதேவியின் பிரிய சகியாக இருப்பவள் துளசி. அன்புக்கு அடைக்கலம் தரும் கண்ணன் துளசியையும் நாயகியாக ஏற்றுக் கொண்டான். கண்ணனும் துளசியும் காதலில் கட்டுண்டு பரவச நிலையில் இருக்கும்போது அதைக் கண்டு விடுகிறாள் ராதை. அசூயை பீறிடுகிறது. 'மானிடரைப்போல் உடலின்பத்தில் நாட்டம் கொண்ட துளசி மனிதப் பிறவியையே அடையட்டும்' என்று சபித்து விடுகிறாள் ராதை.

ராதையின் சாபத்தின்படி பூ உலகில் தர்மத்துவஜன் என்ற மன்னனின் மகளாகப் பிறக்கிறாள் துளசி. அசுர அரசன் சங்கசூடனை மணக்கிறாள். சங்கசூடனும், துளசியும் பேரின்ப வாழ்வு வாழ்கின்றனர். காதல்மிகு மனைவியுடன் களி வாழ்வு நடத்தும் சங்கசூடன் தன்னை மறந்தான்; தருமத்தை மறந்தான்; உலகத்தையே மறந்தான். அவன் ஆட்சியில் யாகம், வழிபாடு, தருமம் எதுவுமின்றி உலகம் ஒளியற்றுப் போயிற்று. இந்நிலையில் நல்லோர்களான தேவர்களை வலுவில் போருக்கு இழுத்தான் சங்கசூடன். போரில் தேவர்கள் தோல்வியையே கண்டனர்.

சங்கசூடனைத் தேவர்கள் வெல்ல முடியாததற்கு இரு முக்கிய காரணங்கள் இருந்தன. துளசி உயர்ந்த கற்புடையவளாக இருந்ததால் அவளது சுமங்கலத்துக்குத் தேவர்களாலும் ஊறு விளைவிக்க முடியவில்லை. சங்கசூடன் மார்பிலே அணிந்திருந்த மந்திர மாலை அவனுக்கு வெற்றி சேர்த்தது இன்னொரு காரணம்.

அரக்கனின் பலத்தைக் கண்ட தேவர்கள் திருமாலிடம் முறையிட்டனர். திருமாலின் திருமார்புக்கு



உரியவளன்றோ துளசி! துளசிக்குச் சாப விமோசனம் அளித்து அவ்வன்னையை ஆட்கொள்ள வேண்டியது அவன் கடமையல்லவா? ஓர் உபாயம் மூலம் சங்கசூடனின் பலத்தைக் குறைப்பதாகக் கூறுகிறார் திருமால்.

இது இப்படியிருக்க யுத்த பூமியில் அரக்கனை எதிர்கொள்கிறார் அரனார். போர் நிகழுகிறது. அக்கிரமத்துக்கும் அருள்மலைக்கும் போர்; அறியாமைக்கும் ஞான மூனிக்கும் போர்; சங்கசூடனுக்கும் சிவபெருமானுக்கும் போர். யுத்தம் நிகழுகையில் திருமால் அந்தணர் வடிவம் கொண்டு சங்கசூடனிடம் அவனது மந்திர மாலையை யாசகமாகக் கேட்கிறார். மதி மயக்கத்தில் கொடுத்து விடுகிறான் அரக்கன். சங்கசூடனின் பாதி வலிமை போய் விடுகிறது. அம்மாலையைத் திருமால் அணிந்துகொண்டு துளசி முன்பாகச் செல்ல, வந்திருப்பது தன் கணவன் என்று எண்ணி விடுகிறாள் துளசி. அவளது கற்பின் பெருமை குறைகிறது. சங்கசூடனின் வலிமையும் பூரணமாகக் குறைகிறது.

அங்கே யுத்தரங்கத்தில் சூலாயுதத்தைச் சிவபிரான் சுழற்ற அழிந்து விடுகிறான் அரக்கன்.

தன் எதிரிலே விஷ்ணு சங்கு சக்கரங்களுடன் நிற்பதைக் கண்டாள் துளசி. மாயவனின் மாயை அவளுக்குப் புரிந்தது. கணவனை இழந்த துயரம் கொந்தளிக்க, ''கல்லைப் போல் மனத்துடன் இரக்கமில்லாமல், என் கற்பின் பெருமையை அழித்து என் கணவனைக் கொன்ற நீ கல்லாகவே ஆக வேண்டும்'' என்று சினந்து சபித்தாள் துளசி.

கோகுலத்தில் அரும்பு கட்டிய அவள் அன்பைத் தனக்கொரு மலராக்கிக் கொள்ளவே இந்த லீலை என்பதைக் கூறினார் பெருமான். ஆனாலும், அன்னையின் வாக்குப்படியே கல்லுருவம் கொள்ளப் பிரதிக்ஞை கொண்டார். அதன்படியே சாளக்கிராம ஸ்படிகக் கல்லாகக் கண்டகி நதி தீரத்தில் உருவம் கொள்கிறார் திருமால். துளசி புண்ணிய பாரத பூமியில் கண்டக நதியாகிறாள். தானே சாளக்கிராமத்துக்கு வாழ்விடமாகிறாள். அது தவிர, துளசிச் செடியாகவும் உலகெங்கும் முளைத்து அவ்வன்னை அர்ச்சனைகள் மூலமும் மாலைகளாகவும் திருமாலை அடைகிறாள்.

(வரபலத்தால் லக்ஷ்மீ கடாட்சத்தைப் பெற்று அதனால் செருக்குக் கொண்ட கயன் என்ற அரக்கன் திருமாலிடம் போருக்குச் சென்று, அவரது சக்கரத்தைப் பறித்துப் பூமியில் எறிந்ததாகவும், பின்னர் திருமால் லக்ஷ்மீகடாட்சத்தைக் குறைத்துக் கயனை மாய்த்ததாகவும், பூமியில் விழுந்த விஷ்ணுவின் சக்ராயுதமே கண்டகி தீரத்தில் சாளக்கிராமமாக ஆனதாகவும் ஒரு புராண வரலாறு உண்டு.)

**சா**ளக்கிராமத்தில் திருமால் ஏற்றுள்ள பல வடிவங்களையும், அவற்றின் சிறப்புக்களையும் 'தேவி பாகவத'த்தில் திருமாலே துளசிக்குக் கூறுகிறார்.

சாளக்கிராமக் கற்களில் பெரியவை, சிறியவை என இரண்டு வகை உண்டு. சாதாரணமாக ஒரு நெல்லிக்காய் அளவு இருக்கும் இந்தக் கற்கள் நாகப்பழ நிறத்தில் இருக்கும்.

நீல நிற வடிவமும் நான்கு சக்கர இலச்சினைகளும் மேற்பாகத்தில் வனமாலையும், பல விசித்திரமான ரதச் சித்திரிப்புக்களும் உள்ள சாளக்கிராமம் 'லக்ஷ்மீ நாராயணர்' எனப்படுகிறது. குடும்பத்தினர் வழிபட்டுப் பேறு பெறுவதற்கு உரியது இது.

இதில் வனமாலையின் வடிவம் இல்லாவிட்டால் அதை ஜனார்த்தனர் என்பர்.

ரதம் போன்ற தோற்றம்; அதிலே இரண்டு துவாரங்கள்; நான்கு சக்கரங்கள்; இப்படிப்பட்ட அமைப்பைக் கொண்டிருக்கும் சாளக்கிராமம் ரகுநாதர் எனப்படுகிறது.

சாளக்கிராமத்தில் மிகச் சிறிய இரண்டு

சக்கர புருஷன்



சக்கரங்கள் மட்டுமே உள்ளது திருமாலின் வாமன அம்சத்தைக் கொண்டிருக்கிறது என்பர்.

மிகச் சிறியதான இரண்டு சக்கர வடிவங்களுடன் வனமாலையும் இருப்பது ஸ்ரீதர சாளக்கிராமமாகும்.

வடிவத்திலே பெரியது; விருத்தாகாரம்; இரண்டு சக்கர வடிவங்கள்; இது தாமோதரர்.

சாளக்கிராமங்களுள் ராஜ ராஜேசுவரம் என்பது மிகச் சிறப்புடையதாகும். ராஜ ராஜேசுவர வழிபாடு ராஜ பாக்கியங்களை அளிப்பது என்பர்.

ரணராமர் என்ஞேர் வகை உண்டு. பெரியதாகவோ அல்லது சிறியதாகவோ இன்றி இடைப்பட்ட வடிவம்; விருத்தாகாரம். இவற்றில் இரு சக்கரச் சின்னங்களையும் அம்பறுத்தூணியின் வடிவையும் காணலாம். இதன் அடிப்பாகம் அம்பு போன்றிருக்கும்.

ஆதிசேஷ சாளக்கிராமம் என்பது நீலமேக நிறத்திலிருக்கும் மிக அபூர்வமான ஒரு வகை. இந்த சாளக்கிராம வழிபாடு புருஷார்த்தங்களை நல்குவது. அடுத்தடுத்து பதினன்கு சக்கரச் சின்னங்களை இந்த சாளக்கிராமத்திலே காணலாம்.

மதுசூதனர் எனப்படும் சாளக்கிராமத்தில் இரு சக்கரங்களையும் கோஷ்பதத்துடன் (பசுவின் குளம்படி) காணலாம்.

ஒரே ஒரு சக்கரம் மட்டுமே உள்ள சாளக்கிராமம் சுதர்சனர் எனப்படும். திருமாலின் திருக்கரத்திலே பொலியும் சுதர்சனச் சக்கரத்தின் அம்சம் இது.

கதாதரர் என்ஞேர் வகை உண்டு. இதிலே சக்கர வடிவம் தெளிவின்றி மறைபட்டது போன்று தெரியும்.

ஞானச் செல்வத்தை நல்கும் ஹயக்ரீவரின் அம்சத்துடனும் சாளக்கிராமம் உண்டு.

நரசிம்மப் பெருமானையும் சாளக்கிராமத்திலே வழிபடலாம். லட்சுமி தேவி, வனமாலை, இரண்டு சக்கரம் ஆகிய சின்னங்களைக் கொண்ட லக்ஷ்மிநரசிம்மரையும் சாளக்கிராமத்தில் காணலாம்.

மகாவிஷ்ணுவின் வாசுதேவர் அம்சத்திலும் சாளக்கிராமங்கள் உண்டு. இவை தனிப்பட்ட ஜொலிப்பு உடையவை. இவற்றில் நடுவே உள்ள துவாரத்தின் முகப்பிலே இரண்டு சக்கரச் சின்னங்கள் காணப்படும்.

நீல நிறம்; சூட்சுமமான சக்கரப் பொறிப்பு; இப்படிப்பட்ட சாளக்கிராமம் பிரத்யும்னர் எனப்படுகிறது. பிரத்யும்னர் வழிபாடு இல்லற நலன்களை நல்குவதாகத் தேவி பாகவதம் கூறுகிறது.

சிவப்பு நிறத்தில் காணப்படும் அபூர்வமான சாளக்கிராமத்தில் அநிருத்தர் உறைகிருர்.

அடிப்பாகம் பருத்து, நுனி குறுகலான சாளக்கிராமம் சங்கர்ஷணர் எனப்படுகிறது. இதில் துவாரத்தின் மத்தியில் இரு சக்கர வடிவங்களைக் காணலாம்.

இப்படிப் பக்தரைப் பரிபாலிப்பதற்காகத் தாம் கொண்ட பத்தொன்பது வடிவங்களைக் கூறுகிருர் திருமால்.

இது தவிர மகர சாளக்கிராமம் என்றும் ஒன்று இருக்கிறது. இது மீன் வடிவில் இருக்கும். மகர சாளக்கிராமத்தின் மீது அபிஷேகமாகப் பால் அல்லது நீரை ஊற்றிஞல் அது மீன் போலவே சுழலுமாம்.

சாளக்கிராமம் சத்ராகாரமாயிருந்தால் அது அரச பதவியையும், விருத்தமாயிருந்தால் அது செல்வத்தையும், சகட வடிவிலிருந்தால் அது துயரத்தையும், சூல நுனியைப் போலவோ அல்லது பிளவு பட்டிருந்தாலோ அழிவையும் அளிப்பதாக தேவி பாகவதம் கூறுகிறது.

துளசி தேவிக்குச் சாப விமோசனம் அளிக்க வந்த திருமால், துளசியின் சாபத்தால் தானே கல்லாகிச் சாளக்கிராம வடிவில் நல்லருள் புரிவதை என்னவென்பது!

சாளக்கிராமத்தில் திருமாலை மட்டுமின்றி, சிவபெருமான், கணபதி, சக்தி, சூரியன் ஆகியோரையும் வழிபடும் நெறி இருக்கிறது. இவ்வழிபாடு பஞ்சாயதன வழிபாடு எனப்படுகிறது.

திருமாலின் பன்னிரண்டு திவ்விய நாமங்களுக்கு உரிய வடிவங்களில் ஆறு இவை.



பஞ்சாயதன வழிபாடு உயர்ந்த தத்துவங்களை அடிப்படையாகக் கொண்டது. ஆயதனம் என்றால் இருப்பிடம் என்று பொருள். எதற்கு இருப்பிடம்? ஆதியில் பிரம்ம அபின்ன சித்சக்தி எனும் பெரும் சக்தியிலிருந்து ஆகாயம் தோன்றியது. பின்னர் ஆகாயத்திலிருந்து வாயு தோன்றியது. வாயுவிலிருந்து தோன்றியது அக்கினி. அக்கினி ஜலத்தைத் தோற்றுவித்தது. ஜலத்திலிருந்து தோன்றியது, பிருத்வி. இவ்வாறு தோன்றிய பஞ்சபூதங்களும் பிரபஞ்சமாகப் பரிணமித்தன. இவற்றில் சிவம் ஆகாயம் என்றும், சக்தி வாயு என்றும், சூரியன் அக்கினி என்றும், விஷ்ணு ஜலம் என்றும், கணேசன் பிருத்வி என்றும் கூறுவர். இப்படிப் பஞ்சபூதங்களும் ஐந்து தேவதைகளுக்கும் ஆயதனங்களாக — இருப்பிடங்களாக இருப்பதால் இவ்வைந்தையும் வைத்துச் செய்யும் தெய்வ வழிபாடு பஞ்சாயதன வழிபாடு எனப்படுகிறது.

புகழ் பெற்ற ஆலயங்கள் பலவற்றில் உள்ள தெய்வ மூர்த்தங்கள் சாளக்கிராமக் கல்லிலேயே அமைந்தவை என்பர். ஸ்ரீமத்வாசாரியார் வியாசரிடமிருந்து பெற்ற மூன்று சாளக்கிராமப் பிரதிமைகளை உடுப்பி ஸ்ரீ கிருஷ்ணன் கோயிலில் தரிசிக்கலாம். திருப்பதி வேங்கடாசலபதிப் பெருமானும் சாளக்கிராமத்திலே எழுந்தருளி யிருப்பதாகச் சொல்வர். வேங்கடேசுவர திவ்ய நாம வழிபாட்டில், 'ஓம் சாளக்கிராம சிலாவாஸாயை நம:' என்று காண்கிறது. நவபாஷாணத்தில் நவக்கிரகங்கள் சாளக்கிராமத்தில் உள்ளன. இவை அனைத்தும் சாளக்கிராமத்தின் பெருமையை உணர்த்துகின்றன.

**படித்துப் பாருங்கள்**

# பேரறிஞர் அண்ணாவின் பெருவாழ்வு

தமது சொல்லாற்றலால் குறிப்பாக மாணவர்களையும், பொதுவாக இளைஞர் சமுதாயத்தையும் தம்பால் ஈர்த்திருப்பவர் திரு அண்ணாதுரை அவர்கள். மாற்றுக் கட்சிக்காரர்களும் மயங்கும் வண்ணம் தம் கொள்கையை எடுத்துரைக்கும் நாவன்மை அவரது தனி உடைமை. தமிழகத்தின் மூலை முடுக்குகளிலெல்லாம், சந்து சதுக்கங்களிலெல்லாம், பட்டிதொட்டிகளிலெல்லாம் அண்ணாவின் குரல் ஒலிக்காத இடமே இல்லை. சாதாரணக் குடும்பத்தில் பிறந்து உயர் கல்வி கற்று உழைப்பால் உயர்ந்து உன்னத நிலைக்கு வந்தவர் அவர்; தமிழக அரசின் தலைமைப் பீடத்தை அலங்கரிக்கும் தகைமையை அவர் பெற்றிருப்பதே அதற்குத் தக்க சான்று. சொல்லாற்றலில் மட்டுமின்றி எழுத்தாற்றலிலும் இணையற்றவர் அண்ணா.

''சொலல் வல்லன் சோர்விலன் அஞ்சான்அவனை
இகல்வெல்லல் யார்க்கும் அரிது''

என்னும் குறளுக்கு ஆதர்சமாக அறிஞர் அண்ணாவைக் கூறலாம்.

சிறந்த திரைக்கதை, நாடக ஆசிரியராகவும் விளங்குபவர் அண்ணா. பேராசிரியர் கல்கி அவர்கள் ''தமிழகத்தின் பெர்னார்ட் ஷா'' என்று அறிஞர் அண்ணாவைப் பாராட்டியுள்ளார்.

இத்தகைய பேரும் புகழும் படைத்த அறிஞர் அண்ணா அவர்களைப் பற்றிய வாழ்க்கை வரலாற்றை எழுதப் புகுந்த இந்த நூலாசிரியர் மிகவும் விரிவாகவும், சுவையாகவும் எழுதியிருக்கிறார். அநாவசியமாக வளர்த்தாமல், வரலாற்று உண்மைகளை விட்டு விடாமல், அண்ணாவின் மேதையை, கல்வியறிவை, சொல்லாற்றலை, கலையார்வத்தை, கட்சிக் காவலை, அரசியல் அறிவை, எழுத்தாற்றலை, சிந்தனைச் சிறப்பை, தலைமை தாங்கும் தகைமையை மிகவும் அழகாகத் தீட்டியிருக்கிறார்.

ஒரு குறிப்பிட்ட கட்சித் தலைவரைப் பற்றி நூல் எழுதப் புகுந்தால் காய்தல் உவத்தல் இன்றி எழுதுவது அரிது. நூலாசிரியரின் சொந்த விருப்பு, வெறுப்பு அவர் எழுத்தில் மிகுப் புகுந்து நூலின் நேர்மையைக் கெடுத்துவிடும். அக் குறை இந்நூலிலில்லை.

அறிஞர் அண்ணா அவர்கள் திராவிடக் கழகத்தில் இருந்தது, பிறகு திராவிட முன்னேற்றக் கழகத்தைத் தோற்றுவித்து அதற்குத் தலைமை தாங்கித் திறம்பட நடத்திச் சென்றது ஆகிய நிகழ்ச்சிகளை இந்த நூல் தெளிவாகக் கூறுகிறது. கருத்து வேறுபாடுகளும், கொள்கை மாறுபாடுகளும் கொண்ட பல்வேறு கட்சிகளைப் பற்றிக் கூறும்போதும், இந்நூல் யாரையும், எந்தக் கட்சியையும் தாழ்த்தியோ, இழித்தோ பேசவில்லை.

பல மேனாட்டு அறிஞர்களின் கருத்துப் பொதிந்த மேற்கோள்களாக நூல் முழுதும் எடுத்துக் காட்டி யிருப்பது ஆசிரியரின் புலமையை நன்கு எடுத்துக் காட்டுகிறது.

இந்நூல் யாவரும் படித்துப் பார்க்க வேண்டிய நூல்; பயனுள்ள பல கருத்துக்கள் அடங்கிய நூல்; எல்லாவற்றுக்கும் மேலாக நல்ல தமிழில் எழுதப்பட்டுச் சிறப்பான முறையில் வெளிக் கொணரப்பட்டிருக்கும் நூல்; தமிழகத்தின் வரலாற்றில் அறுபதாண்டு நிகழ்ச்சிகளைச் சுவையாகக் கூறும் நூல்.

ஆசிரியர்: அ. மறைமலையான்; பிரசுரம்: வானதி பதிப்பகம், தியாகராய நகர், சென்னை-17, விலை : ரூ. 5.00.

# காணிக்கை

சங்கரராம்



**வா**சுதேவனும் பத்மாவதியும் ஒருவரை யொருவர் மனப்பூர்வமாக விரும்பி மணந்து கொண்டவர்கள். ஊரே கண் போடும்படியான தம்பதிகளாக அவர்கள் அமைந்தனர். அவர்களுடைய தாம்பத்திய வாழ்க்கை இன்பமயமாக விளங்கிற்று. வாசு ஒன்றை மனசில் நினைப்பான்; பத்மாவதி அதைச் செய்து முடிப்பாள். பத்மாவதி ஒன்றை விரும்புவாள்; வாசு அதை நிறைவேற்றி வைப்பான்.

வாசுதேவன் நல்ல அழகன்; கம்பீரமான தன் தோற்றத்துக்கு ஏற்ப மிகவும் நாகரிகமாக உடை உடுத்துவான். வசீகரமான அவன் தோற்றம் பத்மாவதியைக் கவர்ந்ததில் வியப்பு என்ன இருக்கிறது?

பத்மாவதியும் நல்ல எடுப்பான தோற்றம் உடையவள்; காண்போரை வசீகரிக்கும் புன்னகை அவளுடையது. வாளிப்பான அவளுடைய உடற்கட்டும், சிரித்த முகமும்தான் வாசுதேவனை அவளிடம் ஈர்த்தன. ஊரே வியக்கும்படியான அவர்களுடைய ஜோடிப் பொருத்தம் விவாகமான பிறகு மேலும் சோபித்தது. குறைவற்ற அவர்களது இல்வாழ்க்கை குழந்தைச் செல்வத்தையும் அடைந்து குதூகலமாய்ப் பொங்கியது.

வாழ்க்கை இவ்வளவு சந்தோஷமாக அமைந்து விட்டால் அப்புறம் விதிக்கு அங்கே வேலையே இராதே! வாசுதேவனையும் பத்மாவதியையும் கண்டு ஊரார் மகிழ்ந்தாலும், உற்றாரும் உறவினரும் உள்ளூறப் பொறாமையால் வெந்து கொண்டிருந்தனர்.

பத்மாவதிக்குத் திடீரென்று கழுத்தைச் சுற்றிப் புண் மாலைபோல் படரலாயிற்று. அது அவளது சங்குக் கழுத்தின் அழகைக் கெடுத்ததோடு நிற்கவில்லை; தாங்க முடியாத வலியையும் கொடுத்தது; அவளது தாமரை முகத்தின் பொலிவு குன்றியது. நாளுக்கு நாள் நோய் வளர்ந்தது.

வாசுதேவன் பணத்தைப் பணமென்று பாராமல் செலவு செய்ததால் பத்மாவதி பல பிரபல டாக்டர்களிடம் சிகிச்சை பெற முடிந்தது. ஆனால் குணமாவது போல்முதலில் தோன்றி, மறுபடியும் அப்பிணி தலையெடுத்தது. வாசுதேவனுக்கு ஒன்றும் புரியவில்லை. தனக்கே அந்தத் துன்பம் வந்திருந்தால்கூட அவன் அவ்வளவு வருத்தப் பட்டிருக்க மாட்டான். அவனுடைய மனக் கவலை பத்மாவதிக்கு எப்படித் தெரியாமல் போகும்?

ஒரு நாள் பத்மாவதி கலங்கிய கண்களுடன் நிலைக் கண்ணாடியில் தன் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தபோது, வாசுதேவன் அங்கே வர நேர்ந்தது. அவனைக் கண்டதும் அவள் 'ஓ'வென்று அழத் தொடங்கி விட்டாள். வாசுதேவன் அவளை அன்போடு தோளில் சாய்த்துக் கொண்டு, ஆதரவாக, ''அழாதே, பத்மா! என்றைக்கும் நீ என் பத்மாதான். தோற்றத்தைப் பற்றி நான் கவலைப்படவேயில்லை. ஆனால் இந்த வலி, இந்த உபத்திரவம், இந்த வேதனையை எத்தனை நாட்கள் நீ சகிப்பாய்? அதை நினைக்கும் போதுதான் எனக்குக் கஷ்டமாக இருக்கிறது. எனக்கு என்னவோ இந்த வியாதி வெகு சீக்கிரத்தில் குணமடைந்து விடுமென்ற முழு நம்பிக்கை வந்து விட்டது. நீ அழாதே, பயப்படாதே'' என்று அவளைச் சமாதானப்படுத்தினான்.

ஒரு நாள் கிராமத்திலிருந்து ஒரு வயோதிக சுமங்கலி இவர்கள் வீட்டுக்கு வந்தாள். அந்தப் பாட்டி இவர்களிடம் பேரன்பு கொண்டவள். குழந்தையிலிருந்து வாசுதேவனை எடுத்து வளர்த்தவள். அவளை எல்லாரும் பொன்னுலைப் பாட்டி என்பார்கள். அவளுக்கு வயது கிட்டத்தட்ட எண்பது இருக்கும். உடல் கன்றிப் போயிருந்தபோதிலும், ஒரு பல் உதிரவில்லை. பூரண ஆரோக்கியத்தோடு இருந்தாள். நல்ல விவேகி. அநுபவசாலியும்கூட.

''இப்படி வியாதி வந்திருக்கிறதென்று எனக்கு எழுதக் கூடாதா? நான் ஓடி வந்திருப்பேனே. டாக்டர்களால் சிகிச்சை செய்ய முடியாவிட்டால் அதற்கு வேறு கதி இல்லையா? பகவானாலேயே கூடவா முடியாது? இதோ நான் சொல்வ

தைக் கேளுங்கள். இந்தக் கண்டமாலையைப் போக்கடிப்பதற்குப் பொன்னால் ஒரு காரை செய்து வேங்கடாசலபதிக்குக் காணிக்கையாக உண்டியில் போடுகிறேன் என்று வேண்டிக் கொள்ளுங்கள். அதைச் சுற்றிச் சின்னஞ் சிறு மணிகளையும் செய்து விடுங்கள்...''

இப்பொழுது வாசுதேவனும் பத்மாவதியும் ஒருவரையொருவர் பார்த்துக் கொள்வதைப் பாட்டி கவனித்தாள்.

''என்ன சந்தேகம்? உன் வியாதி காற்றாய்ப் பறந்து விடும். இது திருஷ்டியடி அம்மா திருஷ்டி. ஏழுமலையான் ஒரு நொடியில் குணப்படுத்தி விடுவான். நம்பு. உங்களுக்குச் சந்தேகம் வேண்டாம். அவன் என் நம்பிக்கைக்காவது சரிப்படுத்தி விடுவான். ஒரு பத்துப் பவுன் செலவாகட்டுமே! ஆண்டவன் உங்களுக்கு வேண்டிய அளவு செல்வத்தைக் கொடுத்திருக்கிறான். அவன் கொடுத்த செல்வத்தை அவனுக்கே செலவழியுங்கள்!''

''ஐயோ! பணத்துக்காக யார் யோசிக்கிறார்கள் பாட்டி? இதுவரையிலும் மூவாயிரத்துக்கு மேலே செலவாகி விடவில்லையா?'' என்றாள் பத்மா.

''பத்துப் பவுன் என்ன? இருபது பவுனில் செய்கிறேன் பாட்டி!'' என்றான் வாசுதேவன். மேலும் கூறினான்: ''நம்பிக்கை இல்லாமலா லட்சோப லட்சம் மக்கள் வேங்கடாசலபதிக்குப் பிரார்த்தனை செய்து கொள்ளுகிறார்கள்? திருப்பதிக்குப் போய்த் தரிசனம் செய்யும் பக்தகோடிகளை எண்ணி முடியுமா? ஏழை பணக்காரன் என்ற வித்தியாசம் இல்லாமல் நாட்டு மக்களே அங்கு கூடி விடுகிறார்களே! உங்கள் வாக்குப்படி நடக்கிறேன். எனக்கு முழு நம்பிக்கை இருக்கிறது பாட்டி!'' என்று வாசுதேவன் கைகளைக் கூப்பியபோது தன் கணவனது அன்பையும் பக்தியையும் முற்றிலும் உணர்ந்த பத்மாவதி பேச முடியாதவளாய் மௌனமாயிருந்தாள்.

''இங்கே என்கிட்ட வா கண்ணு!'' என்று பத்மாவதியை அழைத்த பாட்டி அவள் கழுத்தை நன்றாகப் பரிசோதித்தாள். ''சந்தேகமில்லையடி, அம்மா! இது திருஷ்டியேதான். எந்தக் கொள்ளிக்கண்ணோ பட்டிருக்கு. ஆனால் பாதகமில்லை. கையாலே துடைத்து விட்டமாதிரி இது மறையாது போனால் என்னை ஏனென்று கேள். அது சரி, உன்னாலே மலை ஏற முடியுமோ? அந்தக் காலத்துலே கார் ஏது, பஸ் ஏது? நாங்களெல்லாம் மலையேறவில்லையா?''

''ஏன் முடியாது பாட்டி? எனக்குத் தெம்பு இல்லையா, பலம் இல்லையா?''

''அப்போ, இரண்டு பேரும் படிகள் ஏறி வருவதாக வேண்டிக் கொள்ளுங்கள். இன்றைக்கும் படி ஏறி வருவதாக வேண்டிக் கொள்கிறவர்கள் ஆயிரக் கணக்கில் இருக்கிறார்கள். உங்களுக்குப் பலம் கொடுக்கிறவன் வேங்கடரமணன் அல்லவா? இன்றைக்கே ஒரு ரூபாயையோ அல்லது ஒரு பவுனையோ மஞ்சள் துணியில் முடிந்து வைத்துவிடு. அப்புறம் திருப்பதிக்குப் புறப்படும்போது எனக்குக் கடிதம் எழுது. நானும் தாத்தாவும் தரிசனத்துக்கு வந்துவிடுகிறோம்—மலை ஏறப் போவதில் சந்தேகமில்லை, பத்மா. குணமாக்க வேண்டியது ஏழுமலையான் கடமை. நம்ம கடமை முழு பக்தியோடு அவனைச் சரணடைய வேண்டியது.''

''அவரை விட்டால் எங்களுக்கு வேறு கதி ஏது?'' என்று வாசுதேவன் மறுபடியும் கைகளைக் கூப்பினான்.

''ஆனால் நானும் தாத்தாவும் நடந்து வர முடியாது. அந்தக் காலம் போயிற்று. எங்களையும் குழந்தை குட்டிகளையும் காரில் ஏற்றி விட்டு விடுங்கள்'' என்று பாட்டி சிரித்தாள்.

''அதைச் சொல்ல வேண்டுமா பாட்டி?'' என்றான் வாசுதேவன்.

பாட்டி கிராமத்துக்குத் திரும்புவதற்கு முன் அவர்கள் சனிக்கிழமைகளில் 'ஒரு பொழுது' அனுஷ்டித்தால் சீக்கிரமாகவே பலன் கிடைக்கும் என்று புத்திமதி கூறி விட்டு விடைபெற்றுக் கொண்டாள்.

இரண்டு வாரங்கள் கடந்தன. பத்மாவதிக்கு நோவு சற்றுக் குறைந்தாற்போன்ற உணர்ச்சி ஏற்பட்டது. அப்புறம் படிப்படியாகப் புண் காய்ந்து வருவதும் தெரிந்தது. சில வாரங்களுக்குப் பிறகு உலர்ந்த செதில் உதிரவும் தொடங்கியது. அந்தத் தம்பதிக்கு உண்டான ஆனந்தத்தை விவரித்துச் சொல்லி முடியாது.

ஒரு நாள் தன் கழுத்தைக் காட்டி, ''இந்த வெளுத்த தழும்பு மறைந்துபோய் விடாது?'' என்று பத்மாவதி தன் கணவனைக் குழந்தை போல் வினவினாள்.



புத்தகம் அளக்கிறார்கள்!



இங்கிலாந்தில் ஒரு புத்தகக் கடையில் நாவல்களை மீட்டர் கணக்கில் அளந்து கொடுக்கிறார்களாம். இவை படிப்பதற்காக அல்ல; வீட்டில் அலங்காரமாக வைப்பதற்கு.

ஆதாரம்: 'டெய்லி மிரர்'
தகவல்: 'நாயக்'

---

வாசுதேவன் சிரித்தான். ''இரத்த ஓட்டம் அதிகரிக்க, அதிகரிக்கப் புதுத் தோல் வளர்ந்து அது தானாக மூடிக் கொள்ளும். கவலைப்படாதே. இவ்வளவைச் செய்த வேங்கடாசலபதி அதையும் செய்வார்.''

''செய்வார், செய்வார். நான் தெரியாமல் சொல்லிவிட்டேன்'' என்று பத்மாவதி கன்னங்களில் போட்டுக் கொண்டாள்.

''நாம் திருமலைக்கு எப்போது புறப்படுவது? பொன்னேலைப் பாட்டிக்கு இப்பொழுதே எழுதி விடுங்களேன். பாட்டியும் தாத்தாவும் நம்ம வீட்டிலேயே பத்து நாட்கள் முன்னதாகவே வந்து இருக்கட்டுமே!'' என்றாள் பத்மாவதி.

''சரி, அப்படியே செய்து விடுகிறது. நேற்று என் நண்பன் ஒருவனைக் கண்டேன். அவன் திருப்பதிக் கல்லூரியில் ஆசிரியராக இருக்கிறான். இரண்டு மாதங்கள் லீவு எடுத்துக் கொண்டு வந்திருக்கிறான். அவன் வீடு காலியாக இருக்கிறதாம். மிகவும் சௌகரியமானதாம். நாளைக் காலையில் சாவியைக் கொண்டு வந்து தருவதாகச் சொல்லியிருக்கிறான்.''

''ஓ! ரொம்ப நல்லதாகப் போய்விட்டது. அவசர அவசரமாய் நாம் ஓடித் திரிய வேண்டாம். ஒரு வாரமில்லை. பத்து நாட்கள் கூடத் தங்கி ஒன்று விடாமல் எல்லாவற்றையும் பார்த்துவிட்டு வரலாமே. போன இடத்திலே எல்லாவற்றையும் கவனித்துக் கொள்ள வேலைக்காரன் கேசவன் கூடவே வரப்போகிறான். வீட்டைப் பார்த்துக்கொள்ளும்படி குப்பம்மாவிடம் சொல்லிவிடுகிறேன். இரவில் காவலாக அவளுடைய புருஷனும் வந்து படுத்துக் கொள்ளுவான்.''

''வீட்டிலே நாம் நகை நட்டெல்லாம் வைக்கப் போகிறோமா? முக்கியமான சீட்டு நாட்டையெல்லாம் ஒரு பெட்டியில் பூட்டி ராமநாதன் வீட்டில் வைத்து விட்டால் போகிறது. சரி, நான் பாங்கிக்குப் போய்ப் பணம் வாங்கிக் கொண்டு வர வேண்டும். உனக்கும் ஏதாவது சாமான் வாங்க வேண்டுமானால் குழந்தையை எடுத்துக்கொண்டு வா, போகலாம்.''

''இதோ வருகிறேனே. வாங்குவதற்கு ரொம்ப இருக்கிறது'' என்று அவள் குழந்தையை எடுத்துக் கொண்டு வாசுதேவன் காரை எடுத்துக் கொண்டு வந்ததும் அதில் ஏறிக்கொண்டாள்.

பாங்கின் அருகே வந்ததும் வாசுதேவன், காரை ஓர் ஒதுக்குப்புறமான இடத்தில் நிறுத்தி, மனைவியையும் குழந்தையையும் அதில் உட்கார வைத்துவிட்டு, பாங்கிப் படிகள் ஏறி, மேலே சென்றான். ஐந்து நிமிஷங்களுக்குப் பிறகு கீழே இறங்கி நடைபாதை வரையில் நோட்டுக்களை எண்ணிக்கொண்டு வந்து காரில் ஏறிக்கொண்டான். அடுத்த நொடியில் தொழிலாளி போல் தோன்றிய ஒருவன், காரண்டை ஓடி வந்து, ''ஐயா! இதைக் கீழே போட்டுட்டீங்களே. ஒரு பையன் எடுக்கப் போனான், அவனைத் துரத்திவிட்டுக் கொண்டு வந்தேனுங்க'' என்றான்.

அது ஒரு நூறு ரூபாய் நோட்டு. வாசுதேவன் அதை மலர்ந்த முகத்துடன் பெற்றுக்கொண்டு அவனுக்கு வெகுமானம் கொடுப்பதுபோல் பணப் பையைத் திறந்தான். அப்பொழுது அந்த மனிதன், ''ஐயா! எனக்கு இனும் ஒண்ணும் வேண்டாமுங்க. நான் வேலை செய்து பிழைக்கிறவன். எனக்கு வேலை கிடைச்சால் போதும். எனக்குத் தோட்ட வேலை தெரியுமுங்க. உங்க எதிர் வீட்டில் நேற்று வேலை செய்தேன். பந்தலெல்லாம் போட்டேன். ரெண்டு ரூபாய் கொடுக்க வந்தாருங்க. மூணு ரூபாய் கூட இல்லாமல் கட்டுபடியாகுமுங்களா? நாட்டை விட்டு ரெண்டு காசு வருமின்னுதானே இங்கே வந்திருக்கேன். உங்க பங்களாவிலே எனக்குக் கொடுக்கிற கூலிக்கு மேலே மூணு பங்கு காய்கறி என்னாலே எடுத்துக் கொடுக்க முடியுமுங்க'' என்றான்.

''அப்படியா? எதுக்கும் நீ நாளைக் காலையிலே வா. இதோ இதைக் கொண்டு போய் ஏதாவது வாங்கிச் சாப்பிடு'' என்று வாசுதேவன் கொடுத்த ஒரு ரூபாயை அவன் அரை மனத்தோடு பெற்றுக் கொண்டான்.

''உன் பெயர் என்ன?''

''பொன்னுசாமிங்க.''

''நல்லது. நாளைக்கு வா'' என்று வாசுதேவன் காரை ஓட்டினான்.

மறு நாள் காலையில் பொன்னுசாமி வந்தான். வேலையிலும் அமர்த்தப்பட்டான். வீட்டைக் கவனித்துக் கொள்ளப் பொன்னுசாமியும் சேர்ந்தான் என்று பத்மாவதிக்கு சந்தோஷம். அழைப்புக்கு இணங்கிப் பொன்னேலைப் பாட்டி கணவனுடன் வந்தாள்.

வீட்டில் சந்தடி அதிகரித்தது. ஒரே குதூகலம். பத்மாவதி பொன் காறையைக் கழுத்தில் போட்டுக்கொண்டு போய்க் கழுத்திலிருந்தே அதை எடுத்து உண்டியலில் போட வேண்டுமென்று அபிப்பிராயப்பட்டாள் பொன்னேலைப்பாட்டி. இப்பொழுது பொன்னேலைப் பாட்டி சொல்வதெல்லாம் வேத வாக்காக இருந்ததால் பத்மாவதி காறையைச் சுவாமியின் முன் வைத்துக் கணவனுடன் வணங்கி, காறை ஆபரணத்தை அணிந்து கொண்டாள்.

மலை ஏறவேண்டிய நாள் வந்து விட்டது. வயோதிகர்களும் குழந்தைகளும் காரில் அனுப்பப்பட்டார்கள். படிகள் ஏறி நடப்பதற்கு ஏறக்குறைய இருபது பேர்கள் சேர்ந்து விட்டார்கள். கேசவன் ஒருவனே இருந்தால்

# கலிங்கா பிலிக்ரி

## கலிங்கா பிலிக்ரி நகைகள் உங்கள் அழகுக்கு அழகு சேர்க்கும் பிரத்யேக அணிகலன்கள்!



- நுண்ணிய வேலைப்பாடமைந்த வெள்ளி நகைகள்
- இன்றைய நாகரிகத்தைப் பிரதிபலிக்கும் நூற்றுக்கணக்கான டிசைன்கள்
- ஒவ்வொரு நகையும் ஒரு கலைச் சின்னம்

எங்கள் நகைகள் கீழ்க்கண்ட செட்டுகளில் கிடைக்கின்றன:

(1) குலாப் (2) சாந்தா
(3) கஜ்ரா (4) கிரண்
(5) லலிதா (6) விஜய்
(7) மொகல்-எ-ஆஜாம் (8) ககன் தாரா
(9) உஷா (10) சித்ரா

தனித்தனி நகைகளை வாங்கி, நீங்களே உங்களுக்கு விருப்பமான முறையிலும் செட்டு சேர்க்கலாம்.

எல்லா நகைகளும் 92.5% சுத்த வெள்ளி அடங்கியவை. ஒவ்வொரு நகையிலும் அரசாங்கத்தால் அளிக்கப்பட்ட தர உத்திரவாத அடையாளச் சீட்டு இருக்கிறதா என்று பார்த்து வாங்கவும்.

நகை அழகின் சிகரம்—கலிங்கா பிலிக்ரி நகைகளை அணியுங்கள்




தலைமை ஆபீஸ் & தொழிற்சாலை:
ஸ்ரீ கலிங்கா கோவாபரேடிவ் சில்வர் பிலிக்ரி ஒர்க்ஸ் லிமிடெட்.
ஜோபட்ரு, கட்டாக்-3, ஒரிஸ்ஸா

**கலிங்கா பிலிக்ரி ஒர்க்ஸ் எம்போரியங்கள் கீழ்க்கண்ட இடங்களில் உள்ளன:**

1. 19, லாண்ட்ஸ்டௌன் ரோடு, கொலாபா, பம்பாய்-1
2. G. 56, கன்னுட் ஸர்க்கஸ், புது டில்லி-1.
3. 46/2/1A, காரியஹாட் ரோடு, கல்கத்தா-19.
4. ஹாஸ்பிடல் ரோடு, பெங்களூர்.
5. 2/47-A, ராயப்பேட்டை ஹைரோடு, சென்னை-4.
6. ஸபையர் தியேட்டர் பில்டிங், மவுண்ட் ரோடு, சென்னை-6.
7. நயாஸரக், கட்டாக்-2.
8. மெயின் ரோடு, ராஞ்சி.
9. டாடாநகர் ரயில்வே ஸ்டேஷன், ஜாம்ஷட்பூர்.
10. 7. செக்டர்-2, ரூர்கேலா.

EP-KFW-8

கூடப் போதுமென்பது வாசுதேவனுடைய நம்பிக்கை. கேசவன் அவ்வளவு விசுவாசமுள்ளவன். பலசாலியும் தைரியசாலியும் கூட. மற்றும் உதவியா யிருக்க மூன்றுவது வீட்டில் வேலை பார்த்துக் கொண்டிருந்த கொண்டையனையும் அந்த வீட்டு யஜமானன் அன்புடன் அனுப்பி வைத்தார். கொண்டையன் திருப்பதியிலேயே பிறந்து வளர்ந்தவன். கண்களைக் கட்டி விட்டால் கூட அவனுல் மலை ஏறி இறங்க முடியும். கேசவனுக்கும் சரியான தோழன் கிடைத்ததற்குச் சந்தோஷம்.

இரவு இரண்டு மணிக்கு வாசுதேவனும் பத்மாவதியும் பரிவாரத்துடன் புறப்பட்டு, ''கோவிந்தா, கோவிந்தா!'' என்று கூவிக்கொண்டு சாரை சாரையாக நடக்கும் பக்த கோடிகளுடன் சேர்ந்து கொண்டார்கள். அவர்களுக்குச் சிரமமே தோன்றவில்லை. விளையாட்டுப் போல் முக்கால் வழி நடந்துவிட்டார்கள். ''சூரியன் கிளம்புவதற்கு முந்திக் கோயிலுக்குப் போயிடலாமுங்க'' என்றுன் கொண்டையா.

அங்கு வழுவழுப்பான பாறையின்மீது பத்மாவின் கவனம் சென்றது. அதில் சற்று உட்கார்ந்து இளைப்பாற வேண்டும்போலிருந்தது அவளுக்கு. உடனே உட்கார்ந்தாள். வாசுதேவனும் மற்ற யாத்திரிகர்களும் பேசிக்கொண்டே சற்றுத் தள்ளி நின்று கொண்டிருந்தனர்.

இரண்டு நிமிடங்களுக்குப் பிறகு ''ஐயோ! என் காறை போய்விட்டதே!'' என்று கூக்குரலிட்டாள். சில விநாடிகளுக்குள் ''அம்மா!'' என்று ஒருவன் கதறிக் கீழே விழுவது போன்ற ஓசை கேட்டது. எல்லோருடைய கவனமும் பத்மா இருந்த பக்கம் திரும்பியது. அவ்விடத்துக்கு ஓடினார்கள். நின்று கொண்டிருந்த பத்மாவதி ''பொன் காறை போய்விட்டது!'' என்று தன் கழுத்தைக் காட்டியவாறு புலம்பினாள். இப்பொழுது பத்தடிக்கு அப்பால் கையும் காறையுமாய் விழுந்து கிடந்த ஓர் ஆண் பிள்ளையையும் கண்டார்கள். மற்றும் இருபது முப்பதடி தூரத்தில் கறுப்பு நிறமுடைய ஒரு பெரிய பாம்பு பாய்ந்து ஓடுவதும் தெரிந்தது. கீழே விழுந்திருந்தவனின் கையிலிருந்த காறையைக் கேசவன் பிடுங்கிக்கொண்டான். ''அடே, தோட்ட வேலைக்கு வந்த பொன்னுசாமிப் பயலுங்க இவன்'' என்றுன் அவன் ஆச்சரியத்தோடு.

''ஓ! தொடையிலே சரியாய்ப் போட்டிட்டுதுங்க பாம்பு'' என்றுன் மலை ஏறிக்கொண்டிருந்த ஒரு பக்தன்.

''இந்தப் பொன்னுசாமி அயோக்கியன்!''

''கேசவா! கோபத்தை அடக்கிக்கொள்'' என்று கட்டளையோடு எச்சரித்தான் வாசுதேவன். ''இப்பொழுது அவனைப் பிழைப்பிக்க முடியுமா என்றுதான் பார்க்க வேண்டும்!''

''நேர்மையான பேச்சுங்க. நம்ம பொருள் நமக்குக் கிடைத்து விட்டது. இனி அவன் செத்தால் நமக்கு என்ன கஷ்டம்?'' என்றுர் மற்றொரு பக்தர்.

''ஐயா, பஸ் ரோட்டு பக்கத்திலேதான் இருக்குது. நாங்க ரெண்டு மூணு பேராச் சேர்ந்து மலைக்குக் கொண்டு போயிடுறோம். அங்கே ஒரு சாமியார் மந்திரம் போட்டு, விஷத்தை முறிக்க ஒரு வேரையும் கொடுப்பார். இவன் கட்டாயம் பிழைச்சுக்குவானுங்க!'' என்றுன் கொண்டையன்.

''சரி, நீ கூடவே போ'' என்று சொல்லி வாசுதேவன் பணத்தை அள்ளி அவனுக்குக் கொடுத்தான்.

''தனக்குச் சேரவேண்டிய காணிக்கையை ஏழுமலையான் ஒரு நாளும் விடமாட்டான். அது அந்த மடையனுக்குத் தெரியவில்லை'' என்றுர் ஒரு பக்தர். மலை ஏறி, கோவில் உண்டிகையில் தன் கையாலேயே பத்மாவதி காணிக்கையைச் செலுத்தினுள். பொன்னுசாமியின் உயிருக்கு ஆபத்து இல்லை என்று கொண்டையன் தெரிவித்தது அனைவருக்கும் திருப்தியை அளித்தது.

---

கிண்டி காந்தி மண்டபத்தில்
ஸ்ரீ கனு காந்தி பேசியது:



# கூட்டு வழிபாடு

வழிபாட்டில் பல முறைகள் உண்டு. ஆண்டவனைத் தனிப்படவும் வழிபடலாம்; பலர் கூடியும் வழிபடலாம். கூட்டு வழிபாட்டுக்கு ஒரு தனி மகத்துவம் உண்டு. காந்தியடிகள் கூட்டு வழிபாட்டுக்கு அதிக ஆக்கம் அளித்தார்.

இதோ இந்தக் கிண்டி காந்தி மண்டபத்தில் உட்கார்ந்து, நாமனைவரும் கூட்டாக ஆண்டவனை வழிபடும்போது அதன் பெருமை புலப்படுகிறது.

இந்த காந்தி மண்டபத்தை எத்தனை கற்கள் உருவாக்கியுள்ளன? அவை தனித் தனியாக இருந்தாலும் அவற்றுக்குக் 'கல்' என்னும் மதிப்புப் போகுமா? அவை தம் மதிப்புக் குறையாமல், மாற்றுக் குறையாமல் அப்படியே இருக்கலாமே! இருந்தால் அவற்றுக்கு ஒரு குறையும் ஏற்படப்போவதில்லையே! ஆனால் அதே கற்கள் ஒன்றோடொன்று இணைந்து எத்தனை பெரிய மண்டபத்தை உருவாக்கியுள்ளன! இந்த மண்டபத்துக்கு எத்தனை அழகு சேர்க்கின்றன! அவை தனியாக இருக்குமானல் இந்தக் காரியம் சாத்தியமாகுமா?

ஆண்டவனது வழிபாட்டில், இத்தகைய காரியத்தைத்தான் கூட்டு வழிபாடுகள் சாதிக்கின்றன! அத்தகைய பிரார்த்தனைகளுக்குப் பலனும் அதிகம்.




# ஓவல்டின்

## ஒப்பற்ற 'ஒலிம்பிக்' பானம்

### 'ஒலிம்பிக்' தெம்பை உங்களுக்குத் தருவதற்கென சக்தி செறிந்து வருகிறது.

மற்றெந்த உணவு பானத்தையும் விட அதிக மால்ட் அடங்கப்பெற்று, சக்தி செறிவூட்டப்பட்டது ஓவல்டின். மால்ட் என்பது தெம்பு தரும், இயற்கையின் ஒப்பற்ற ஊட்டப் பொருள்களில் ஒன்றாகும். அதிக மால்ட், பால், வைட்டமின்கள், புரதங்கள், கார்பொஹைட்ரேட்டுகள், யாவும் அடங்கிய ஓவல்டின், ஆட்ட வீரர்களுக்குக் கிடைக்கும் அதே 'ஒலிம்பிக்' தெம்பை உங்கள் குடும்பத்திற்கும் அளிக்கும்.

அருந்துங்கள் ஓவல்டின் : உடல்நலத்திற்கு ஓவல்டின், வலிமைக்கு ஓவல்டின், தெம்புக்கு ஓவல்டின்.

சக்தி செறிவிக்கப்பட்ட ஓவல்டின், 1932 முதல் நடத்தப்பட்டுவரும் 7 ஒலிம்பிக் ஆட்ட விழாக்களிலும் அங்கீகாரம் பெற்ற ஒரே ஒரு பானமாக விளங்கிவருகிறது.

# ஒவ்வொரு துளியிலும் ஊக்கம் துள்ளும்

ஓவல்டினைப் பாரதத்தில் ஜகத்ஜித் இண்டஸ்ட்ரீஸ் லிட்., நிறுவனம், லண்டனிலுள்ள ஏ வாண்டர் லிமிடெட்டின் லைஸென்ஸ் பெற்றுத் தயாரிக்கிறது.

ஏகபோக விநியோகஸ்தர்கள்: வோல்டாஸ் லிமிடெட்.




# மணக் கோலம்

பி.வி.ஆர்

## அத்தியாயம் 8

ரவி, சீதாவிடம் ''நான் உன் அம்மாவைத்தான் பார்க்க வந்தேன். அம்மா உன்னிடம் எல்லாம் சொல்லுவாள். நான் வரட்டுமா?'' என்று கேட்டான்.

''அம்மா! அவருக்குக் காப்பி கொடுத்தாயா?''

''பரவாயில்லே.... இன்னொரு நாள் உங்க வீட்டிலே எனக்குச் சாப்பாடே போடுங்கள்....!''

ரவி காரில் வந்து உட்கார்ந்தபோது கண்களில் நீர் துளித்தது! மெதுவாக 'ஸ்டார்ட்' செய்த அவன், சாம்பமூர்த்தி அன்று இறந்து போகாமல் இருந்திருந்தால் இந்தக் குடும்பம் இன்று எப்படி இருக்கும் என்பதைக் கற்பனை செய்து பார்த்தான். இந்தப் பாகீரதி அம்மாள் மஞ்சளும் குங்குமமுமாய், உடல் பருத்து, முகத்தில் மூன்று பெண்களையும் கொடுத்துவிட்ட மகிழ்ச்சி மலரப் புன்னகையுடன் இருப்பாள்! சீதாவுக்குப் பத்து ஆண்டுகளுக்கு முன் கலியாணமாகியிருந்தால்? இப்போதுள்ள மூக்குக் கண்ணாடி அவளுக்கு இருந்திருக்காது. கொலுசின் கிண்கிணி ஒலிக்கத் தாயின் மடி தேடி ஓடி வரும் ஒரு குழந்தை. செல்லமாக அம்மாவின் கன்னத்தைக் கிள்ளிவிட்டுச் சிரிக்கும் ஒரு பாலகன்! அப்பாவின் ஒரு பிழையால் ஒரு குடும்பத்தின் பாதையே அல்லவா நாசமாகிவிட்டது....? முள்ளிலும் புதரிலும் காட்டிலும் அவர்கள் செல்லும்படி வழிவகுத்து விட்டார்!

திடீரென்று அவன் மனத்தில் ஓர் எண்ணம் பொறியாகக் கிளம்பி, கிளம்பிய விநாடியிலேயே சுடராக எரியலாயிற்று. அப்பா வீட்டையும் பணத்தையும் கொடுத்துத் தம் மனச்சாட்சிக்கு ஆறுதல் தேடிக் கொண்டார். ஓர் ஏழைக் குடும்பத்தின் மீதுள்ள கழிவிரக்கத்தைக் காட்டிலும் தம்முடைய மனச்சாட்சியும் ஆறுதலும் தான் பெரிதாக அவருக்குத் தோன்றியிருக்கிறது! வெறும் பணத்தாலும் வீட்டினாலும் கிடைக்கக் கூடிய சௌகரியங்கள் பாகீரதியின் குடும்பத்துக்கு என்ன இன்பத்தை அளித்துவிட முடியும்? கொழுகொம்பு கிடைக்காமல் கொடி பல நாட்கள் வெய்யிலில் வாடி, வளர முடியாமல் தவித்த பிறகு, தங்கத் தூண் கட்டிக் கொடுத்தால் என்ன பிரயோசனம்?

பழையதையெல்லாம் மறந்து சீதா இன்பமாக, பாகீரதி நிறைந்த மனத்துடன், இரு தங்கைகள் சந்தோஷமாக இருக்கவும் வாழவும் இனி ஒரு வழிதான் உண்டு. அதை ரவி ஒருவனால் தான் செய்யவும் முடியும்! எந்த மனிதனும் உயிரில் எழுதிச் செய்ய முடியாததை ரவி தன் வாழ்நாளிலேயே செய்து காட்டி விடுவான்!

ஃ ஃ ஃ

போர்ட்டிகோவில் காரை நிறுத்தினபோது, ''என்ன அண்ணா! இவ்வளவு நேரம்...? நான் அப்போதே வந்து விட்டேன்... அம்புஜம் வீட்டிலேயே இருக்கவில்லை!'' என்று அகிலா கூறிக்கொண்டே காரின் கதவைத் திறந்து கொடுத்தாள்.

''சாம்பமூர்த்தியின் மனைவியைப் பார்க்கப் போனேன்....''

''அதே வீட்டில்தானே சந்தானமும் இருக்கிறார்.....''

''ஆமாம்.... இன்னிக்கு அந்தப் புண்ணியவதியின் தரிசனம் கிடைத்தது. அவளுடைய பெண் சீதாவையும் சந்தித்தேன்......''

''ஏதோ சர்க்கார் ஆபீஸிலே ஒர்க்கா இருக்கிறதாகச் சந்தானம் சொல்லியிருக்கார்.... அவளா....?''

''ஆமாம்..... அகிலா நீயும் அவளைப் பார்க்க வேண்டும்.... நம்ம

அப்பா அவர்கள் விஷயத்தில் ஈவிரக்கம் இல்லாமல் நடந்திண்டிருக்கார்......''

ஹாலில் உட்கார்ந்து கொண்டே, ''அதான் வீடும் பணமும் வைச்சிருக் காரே.....?'' என்றாள் அகிலா.

''அது அப்பா நம்மைத் தாமே ஏமாத்திக்க வைச்ச சொத்து. இத்தனை காலமா, மானம் ஒண்ணுதான் நம்ம சொத்துன்னு. அந்தக் குடும்பம் வாழ்ந்துண்டிருந்திருக்கு. சீதா எவ்வளவு பொறுப்பாக நடந்து கொண்டிருக்கிறாள், தெரியுமோ?''

''ஏதேது, ரொம்ப 'இண்டரஸ்ட்டா' இருக்கியே அண்ணா ?''

''நீ பார்த்துப் பேசினால்தான் உனக்கும் புரியும். அந்தச் சீதாவைப் பார்த்த போது, ஏதோ ஒரு சோகம் தான் கண்ணிலே படறது.... ஆனால்



அவளுடைய மனசை மட்டும் கண்ணுலே பார்க்கவோ, இல்லே போட்டோ எடுக்கவோ முடிஞ்சால் அது எப்படி இருக்கும், தெரியுமா?''

'' எப்படி....?''

''ஒரே ஒளி மயமாக இருக்கும்... எல்லாத்தையும் துறந்தவருடைய பற்றற்ற தன்மை எப்படி இருக்கும்? ஒரே ஒளி மயம் தானே? எதுவும் அதனோடு ஒட்டாது, கறைப்படுத்தாது. அதுமாதிரித்தான் அந்தச் சீதாவின் மனசும்.....''

''சபாஷ்! நீகூட ஒரு பெண்ணைப் புகழ ஆரம்பிச்சுட்டே! இது என்ன விபரீதத்துக்கோ !''

''அவள் மூக்கையும் விழியையுமா நான் புகழுகிறேன்? அவளுடைய வெளி அழகு, அது இருக்கா இல்லியான்னுகூட இன்னும் தெரியாது. அவ அகஅழகுதான் என்னைக் கவர்ந்திருக்கிறது. எந்தப் பெண்ணுக்கும் இந்த அக அழகுதான் வேணும்..... அதுதான் அவளை நல்ல மனைவியாக்க, தாயாராக ஆக்க முடியும். மனிதனுக்கு வாழவேண்டும் என்று ஊக்கமும் உற்சாகமும், ஏன் ஒரு தைரியமும் கிடைக்கிறதே, அது இந்த உள் அழகின் சக்தியால்தான்....!''

''உன் ஆராய்ச்சி எதிலே கொண்டு போய் விடப் போகிறதோ... போதாததற்கு, அந்தக் குடும்பம் இன்னும் கொஞ்ச நாட்களிலே



நம்ம காம்பவுண்டுக்குள்ளேயே வந்து விடப் போகிறது!'' என்றாள் அகிலா.

ரவி இரண்டு மூன்று நாட்களுக்குப் பிறகு வக்கீலைப் பார்த்தான். பிக்ஸட் டெபாஸிட்டாக இருந்த ஒரு லட்சம் ரூபாயை வட்டியும் முதலுமாக அகிலாவின் பெயருக்கு மாற்றினான். 'பாக்கிய நிலையம்' ரவியின் பெயருக்கு என்று இருந்தாலும், பாக்கியம் தன் ஆயுள் பரியந்தம் அதில் இருக்க உரிமை பெற்றிருந்தாள். அதை ரவிக்கு விற்கக்கூட உரிமை கிடையாது. கோதண்டராமன் படித்த பள்ளிக்கு ஒரு லட்சம். அநாதை ஆசிரமங்களுக்கு ஏதோ கொஞ்சம். இரண்டு மத ஸ்தாபனங்களுக்கு — தர்மத்தையும் நேர்மையையும் போதனை செய்யும் இருவருடைய மடங்களுக்கு ஏழு லட்சம்.

வீட்டில் அவருடைய அறையில் இருக்கிற பணமும் சர்க்காருக்குக் கொடுத்துவிட்டு மிஞ்சுகிற பாக்கியும் ரவியின் சொந்த உபயோகத்துக்கு வைக்கப்பட்டிருந்தது.

ரவி தன் பணத்தைப் பற்றிப் பிறகு கவலைப்பட்டுக் கொள்ளலாம் என்று இருந்தான். ராஜாவுக்குப் பங்களாவின் பின்புறத்திலுள்ள ஒரு வீட்டைச் சன்மானமாக அவனுடைய உண்மையான உழைப்புக்கு நன்றியாகக் கோதண்டராமன் அளித்திருந்தார். அதை அவனிடம் ஒப்படைத்தான். சில்லறை சில்லறையாக எத்தனையோ பேர்களுக்கு உயிலின்படி வக்கீல் மூலமாக அனுப்ப வேண்டியதை அனுப்பினான்.

முதலில் அந்த வீட்டுக்குக் குடியேறுவதா என்று யோசித்துக் கொண்டிருந்த ராஜா, ஜானுவின் குடும்பத்துக்குக் கிடைத்திருந்த இன்னொரு வீட்டில் புக அவர்கள் முடிவு செய்தாகி விட்டதை அறிந்ததும் திருவான்மியூரை விட்டு மாறினான்.

அன்று மந்தியானம் சந்தானத்தின் அறையில் திடீரென்று தனக்கே உரித்தான நிதானத்துடன் சேஷன் நுழைந்தான். ஒரு பைலில் ஆழ்ந்து போயிருந்த சந்தானம், யாரோ ஒருவர் வந்து நிற்கிறார், அவர் சாட்சாத் சேஷனாகத்தான் இருக்க வேண்டும் என்ற அரை உணர்வோடு, படிக்க வேண்டியதைப் படித்து முடித்து விட்டு, ''என்ன மிஸ்டர் சேஷன்! உலகமெல்லாம் எப்படிப் போகிறது?'' என்று கேட்டான்.

''இந்த உலகம் போகிற போக்கு இருக்கட்டும் ஸார். இன்னிக்கு ரஸமான ஒரு சேதி கொண்டு வந்திருக்கேன்!''

''சேதின்னு சொல்லு, போதும்! நீ கொண்டு வந்தால் அது ரஸமாகத்தானே இருந்தாகணும். என்ன?''

''சீதாவை ஏன் அந்த ரகுபதி கலியாணம் பண்ணிக் கொள்ள அன்னிக்கு அப்படி ஒற்றைக் காலிலே நின்றான், தெரியுமா?''

''ஏன்?''

''தேசிகாச்சாரின்னு ஒரு வக்கீல் தி. நகரிலே இருக்கார் தெரியுமா?''

''சொல்லு...!''

''அவர்கிட்டே ஒரு டைப்பிஸ்ட் இருக்கான்...... சீனுவாச வரதன்னு பேர். அந்த எஸ். வரதனுக்கும் ரகுபதிக்கும் தொடர்பு உண்டு....!''

''உம்..... அப்புறம்?''

''அசுவமேத யாகத்துக்கு இரண்டு பேரும் ஒண்ணாகத்தான் போவா. ரகுபதி மத்த எத்தனையோ பேர்களுக்கு எத்தனையோ விஷயங்களிலே குரு பீடம் வகிச்சாலும், இந்தக் குதிரை சாம்ராஜ்யத்திலே வரதன் சொன்னால் சொன்னதுதான். ஓடுகிற குதிரையின் முப்பாட்டன், முப்பாட்டி பெயரெல்லாம் அவனுக்கு அத்துப்படி. காலங்காத்தாலே குளிரிலே கிண்டி மைதானத்துக்குப் போய், கையிலே ஒரு கடிகாரத்தையும் வைச்சுண்டு, அவன் வெள்ளோட்டம் பார்க்கப் போய் விடுவான்.''

''விஷயத்துக்கு வா.''

''இந்தப் பீடிகை ரொம்ப அவசியம். இல்லா விட்டால் உங்களுக்குப் 'பாக் கிரவுண்டு' தெரியாது....''

''சரி.... சொல்லு.....!''

''இவ்வளவு புத்தி, ஞானம், சாஸ்திரப் பிரக்ஞை எல்லாம் இருக்கிற வரதன் ரகுபதிக்கு 'அட்வைஸ'ராகி ஏழெட்டு வருஷமாகிறது. வரதன் தன் 'அட்வைஸை'ச் சும்மா கொடுக்கல்லே. ஜெயிக்கிற பணத்திலே ஒரு ஷேர் வரணும். ரகுபதிக்கு ஒரு நாள் ஏகப்பட்ட நஷ்டம். கடைசியிலே ஓர் இரண்டாயிரம் கெடைச்சுது. அதிலே பங்கு கேட்டு நின்றான் வரதன். அப்பத்தான் குருவைச் சிஷ்யன் அவமதித்துப் பேசினான். கைப் பணம் மீண்டு கிடைச்சிருக்கு. அதிலேந்து குரு தட்சிணையைக் கொடுத்தால், நஷ்டம் தான் சம்பவிக்கும்னு ரகுபதி கணக்குப் போட்டான்..... அவ்வளவுதான்....''

''இதுக்கும் சீதாவுக்கும் என்னடா சம்பந்தம்?''

''இருங்கோ வரேன்.... இந்தச் சம்பவம் நடக்கிறதுக்கு முன்னாலே எப்பவோ கோதண்டராமன் தேசிகாச்சாரி வீட்டிலே உட்கார்ந்து உயில் எழுதியிருக்கிறார். அதுக்கு வேண்டிய

# கேசம் உதிருகிறதே என்ற கவலையா?



## இன்றே **ஸில்விக்ரின்** உபயோகிக்கத் தொடங்கி உங்கள் கேசத்திற்குப் புத்துயிர் அளியுங்கள்

**இந்த அபாயக் குறிகளை அசட்டை செய்யாதீர்கள்.**

கேச உதிர்வு, உச்சந்தலையிலே தினவு, காய்போல் வரண்ட உரோமம். உங்கள் கேசத்திற்கு உகந்த ஊட்டமில்லை என்பதற்கான அறிகுறிகள் இவை. ஊட்டமின்மைதான் இளமையிலேயே வழுக்கை விழக் காரணமாகிறது. அந்த ஊட்டமின்மைக்கு உரிய நிவாரணம் ஸில்விக்ரின்—கேசத்திற்குரிய இயற்கையான போஷாக்கு.

**ஸில்விக்ரின் எப்படி வேலை செய்கிறது.**

18 அமினோ-அமிலங்களை உங்கள் கேசத்திற்கு உணவாக அளிக்கிறது இயற்கை. இந்த அமினோ—அமிலங்கள் எல்லாமே அடர்வாக ஒன்று செறிந்த வடிவில் கிடைக்கச் செய்வது ஸில்விக்ரின் ஒன்றே. அது வேகமுடன் மயிர்க்கால்களை ஊடுருவி; ஊட்டமளித்து உரமேற்றி, பாங்கான கேச வளர்ச்சியை ஊக்குவிக்கும்.

**உபயோக விதிமுறைகள்:**

உங்கள் உச்சந்தலைமீது அன்றாடம் இரு நிமிட நேரம் ப்யூர் ஸில்விக்ரின் தேய்த்திடுங்கள். கேச நிலை அபிவிருத்தி அடையும் வரை உபயோகியுங்கள் ப்யூர் ஸில்விக்ரின். கேச நலம் மீண்டு விட்டதென்றால் அதன் பின் கேச நலனைக் காத்துக் கொள்ளத் துணை புரிவது ஸில்விக்ரின் ஹேர் டிரஸ்ஸிங்-ப்யூர் ஸில்விக்ரின் அடங்கிய, எண்ணெய் அடிப்படை கொண்ட லோஷன்.

ஆல் அபௌட் ஹேர் (All About Hair) என்ற புத்தகத்தின் இலவசப் பிரதியைப் பெற, எழுதுங்கள்: டிபார்ட்மெண்ட் K-1, தபால் பெட்டி 727, பம்பாய்-1.




ஸில்விக்ரின் தயாரிப்புகள்—ஆடவர், பெண்டிர் யாவரும் உபயோகிக்கத் தக்கவை.

**ஸில்விக்ரின்**

கேசத்திற்குரிய இயற்கையான போஷாக்கு.

LPE-Aiyars S. I TAM

நகல்களை இந்தப் பயல் 'டைப்' அடிச்சிருக்கான்.......''

''இப்போ எல்லாம் புரியறது. உனக்கு எப்படித் தெரிஞ்சுது?''

''இந்த வரதன் மிகவும் பயங்கரமானவன். தூக்கி வைக்கிறதுன்னு உச்சாணிக் கொம்பிலே வைப்பான். ஆளை மட்டம் தட்டி, குழி பறிக்கிறதுன்னு கேட்க வேண்டாம். எழுந்திருக்க முடியாதபடி செய்து விடுவான். திருவல்லிக்கேணியிலே தானே ஜாகை? அசுவமேதத்துக்குப் போகிறவன் ஒருத்தன்கிட்டே ரகுபதியின் வரிசையையெல்லாம் சொல்லியிருக்கான். அவன் என்கிட்டே சொன்னான். இந்த உலகம் எத்தனை சின்னதுன்னு பார்த்தேளா, ஸார்.....?''

''நீ பலே ஆள். அந்தச் சீதா பாரேன், பெரிய இடத்திலே கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போறா.''

''எனக்கு 'இன்விடேஷன்' வரதோ இல்லியோ, ஜானவாசத்துக்கே வந்து நின்னுடுவேன்.''

சேஷன் சென்ற பிறகு ரகுபதியைப் பற்றிச் சிறிது நேரம் நினைத்த சந்தானம், ஃபைலில் மீண்டும் தன் கவனத்தைச் செலுத்தலானான்.



''திடீர் காப்பிப் பௌடர் வாங்கி வரக்கூடாதோ...திடீர்னு விருந்தாளிகள் வந்தால்...''

''திடீர்னு பணம் வரட்டும்! திடீர் காப்பிப் பௌடர் வாங்குவோம்!''

என்று ரவி பாகீரதி அம்மாளைச் சந்தித்துவிட்டுப் போனானோ அன்றையிலிருந்து அவளை, இதுவரையில் உணர்ந்தறியாத பயமும் பீதியும் பிடித்துக் கொண்டன. கோதண்டராமனால் அவளுக்கு உண்டான கஷ்டங்களையும், வாழ்க்கையில் ஏற்பட்ட துக்கங்களையும் அவளால் இத்தனை நாட்கள் பொறுத்துக் கொள்ள முடிந்தது. அவற்றைச் சமாளிக்க ஒரு தைரியமும், சமாளித்துவிடுவோம் என்ற நம்பிக்கையும் இருந்தன. ஆனால் கோதண்டராமன் ஒரு வீட்டையும், ஐம்பதாயிரம் ரூபாய் பணத்தையும் அவள் பெயருக்கு எழுதி வைத்துவிட்டுப் போயிருப்பதைக் கண்டு, அவள் மனம் பதைபதைத்ததே தவிர, திருப்தியோ சந்தோஷமோ அடையவில்லை. இந்தச் சொத்து அவள் கனவிலும் எதிர்பாராத ஒன்று. எவ்வளவு தூரத்துக்கு அவள் அச்சொத்துக்கு அருகதை உள்ளவள் என்பதை எண்ணிப் பார்த்த போது அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. அவளுடைய கணவர் இருந்திருந்தால் ஒரு வேளை ஒரு வீட்டையும் கட்டி இத்தனை பணத்தையும் வைத்திருப்பாரோ என்னவோ? ஆனால் அவரிடமிருந்து நேரடியாகக் கிடைக்கும் சொத்தின் தன்மை தனி விதம்தான்! கோதண்டராமனின் வியாபார விளையாட்டுக்களில் சாம்பமூர்த்தி அடிபட்டு இறந்து போக, அவருக்கு நஷ்டஈடு போலல்லவா இந்தச் சொத்து இப்போது வருகிறது! மேலும், இம்மாதிரி வரும் சொத்தை அவள் ஏற்றுக் கொண்டால் சமூகம் என்ன நினைக்கும் அவளைப் பற்றி? சாம்பமூர்த்தியின் அகால மரணமும், அவர் மரணம் அடைய ஹேதுவாயிருந்த காரணங்களும் பாழும் சமூகத்துக்கு எப்படித் தெரியும்? ஒரு லட்சாதிபதி மனசு இரங்கி ஒரு விதவைக்கும் அவளுடைய மூன்று பெண்களுக்கும் சொத்து எழுதி விட்டுப் போயிருக்கிறான் என்று நாளைக்கே பேப்பரில் வந்தால், படிக்கிறவர்களில் எத்தனை பேர்கள் அந்த ஏழைக் குடும்பத்துக்காக அனுதாபமும், சந்தோஷமும் கொள்ளுவார்கள்? இன்னும் எத்தனை பேர்கள், லட்சாதிபதியின் தயாள குணத்தை எண்ணிப் புகழுவார்கள்? ஆயிரத்தில் ஒருவர் மனத்தில்கூட இத்தகைய எண்ணங்கள் எழாது. எடுத்த எடுப்பிலேயே சந்தேகம்தான் ஒவ்வொருவனுடைய உள்ளத்திலும் எழும். மனைவியும் குழந்தைகளும் உள்ள ஒரு பணக்காரன், ஓர் ஏழை விதவையின் பேரில் சொத்து எழுதி வைத்திருந்தால் அதற்கு ஒரு காரணம்தான் இருக்க முடியும் என்றல்லவா கேட்கிறவன் உள்ளத்தில் எழும்!

பாகீரதி மனம் நொந்தாள்!.... கோதண்டராமன் செய்து விட்டுப் போன காரியம் விபரீதமாகி விடுமோ என்று அவள் மனம் பயந்து துடி துடித்தது. கணவர் இறந்து போய்ப் பத்து ஆண்டுகளாகி விட்டன. மன சுக்குப் பாரமாக மூன்று பெண்கள் மஞ்சள் கயிற்றுக்காக நிற்கிறார்கள். இந்த நிலையில் அவள் கிடைத்திருக்கிற வீட்டில் குடியேறப் போனால், கண்டிப் பாக உலகம் தூற்றும். அபவாதம் பரவும். ஏன், அது இந்தப் பெண்களின் எதிர்கால சுபிட்சத்துக்கே உலை வைக்க லாம்.....!

அவளுக்குச் சொத்தும் வேண்டாம், சுகமும் வேண்டாம். இந்தனை நாட்கள் இருந்தது போலவே அவள் இனியும் இருப்பாள், எஞ்சிய காலத்தைக் கழிக்க. லோக மாதா கற்பகாம்பாள் சந்நிதியும், கதை புராணங்களும் இருக் கும்போது அவளுக்குப் புதிதாகச் சொத்து ஏதும் தேவையில்லை. பெண்க ளின் தலையெழுத்து எப்படி எப்படி இருக் கிறதோ, அப்படி அப்படி இருக்கட்டும்!

வேண்டுமானால் சந்தானத்தின் உதவி யைக் கொண்டு, வந்திருக்கிற சொத்து தனக்குத் தேவையில்லை என்று அவள் எழுதியும் கொடுக்கத் தயார்!

தினம் தினம் உலகமறியாத கமலா வும், ஜானுவும் எப்போது அரிசிக் காரன் தெருவை விட்டு ஆழ்வார்ப் பேட்டைக்குச் செல்லப் போகிறோம் என்று கேட்கிறார்கள். சீதா ஒருத்தி தான் நெருப்பால் பாதிக்கப்படாத உலோகத்தைப் போல் அது பற்றிய சிந்தனையே இன்றித் தன் இயல்பில் இருக்கிறாள்.

**அ**ன்று மாலை நான்கு மணிக்கு ரவியும் அகிலாவும் அரிசிக்காரன் தெருவுக்கு வந்தார்கள்.

பாகீரதி மாமி இருவரையும் வர வேற்றாள். பெரிய பணக்கார வீட் டைச் சேர்ந்த ஒரு பெண், ஆடம்பரம் இல்லாமல் ஒரு சாதாரண வாயில் புடவையில் காட்சியளிப்பதைக் கண்ட போது கமலாவுக்கு வியப்பாக இருந்தது.

''எனக்கு இந்த மாதிரி பழைய காலத்து வீடு ரொம்பப் பிடிக்கிறது!'' என்ற அகிலா தொடர்ந்து, ''ரேழி, கூடம், முற்றம் எல்லாவற்றையும் கண் மூடித்தனமா முன்காலத்தில் உள்ள வர்கள் நினைச்சுக் கட்டவில்லை. ஒவ் வொன்றிலும் ஒவ்வொரு விசேஷம் இருக்கு'' என்றாள்.

உட்கார்ந்து கொண்ட ரவி, ''மாமி! நான் எல்லா ஏற்பாடுகளையும் செய் தாகி விட்டது. நீங்கள் என்றைக்கு வேண்டுமானாலும் வரலாம். சீதாவையும் கேட்டுச் சொல்லுங்கள்...!'' என்றான்.

அவனுடைய முகத்தைப் பார்க்கத் தைரிய மில்லாதவளாய்ப் பாகீரதி, ''உங்கள் தகப்பனார் இறந்து போய் ஒரு மாதம்கூட ஆகவில்லை.... இதற்கு என்ன அவசரம்.....! மேலும், எனக்கு இந்த வீடே பழகிப் போய் விட்டது!'' என்றாள்.

''நான் அவசரப்படுத்தவில்லை, மாமி. எங்க அப்பா உங்களுக்குன்னு வைச்ச தைக் காலதாமதப்படுத்தாமல் ஒப் படைக்கணுமோ இல்லியோ? இன்னும் இது சம்பந்தமா எத்தனை வேலைகள் இருக்கு.....? ரிஜிஸ்ட்ரார் ஆபீஸிலே உங்க பெயருக்கு வீட்டை மாற்ற ணும்.....'' அகிலா மூச்சு விடாமல் பேசினாள்.

''எனக்கு எல்லாம் புரியறது, அம்மா! நீங்க பெரிய மனசு பண் ணித்தான் வருகிறீர்கள்.... என்மேலே இவ்வளவு இரக்கமா யிருக்கிறீர்கள்... ஆனால் என் நிலைமையையும் நீங்க நினைச்சுப் பார்க்கணும்.....''

''உங்களுக்கு என்ன கஷ்டம் இருந் தாலும் சொல்லுங்கள்!'' என்றான் ரவி.

பாகீரதி தன் உள்ளத்தை வதைத்து வரும் பயத்தையும் சந்தேகங்களையும் எப்படி ரவியிடம் கூறுவாள்? எப்படி யாவது இப்போதைக்கு மழுப்பி அவர் களை அனுப்பி விட்டால் அப்புறம் சந் தானம் மூலமாக மனத்தில் முடிவாகி விட்ட தீர்மானத்தைத் தெரிவிக்கலாம்.

''இப்போதைக்கு நாங்கள் இங் கேயே இருந்து கொள்கிறோம். வீடும் பணமும் உங்ககிட்டேயே இருக்கட் டும்..... அப்புறம் பார்த்துக் கொள்ள லாம்......''

ரவி இந்த முடிவைச் சற்றும் எதிர் பார்க்காததால், அசந்து போனான். அகிலாவுக்கு ஆச்சரியம்தான் உண்டா யிற்று. ஒரு வேளை, ஏழைமையின் பயம்தான் இந்த முடிவுக்குக் காரணமோ என்ற கேள்விகூட எழுந்தது. ஆனால் அவள் அந்தக் கேள்வியைத் தன்னுள் ளேயே புதைத்துக் கொண்டாள்.

ஏமாற்றத்துடன் அண்ணனும் தங்கை யும் செல்வதைப் பார்த்துக்கொண்டே நின்ற அம்மாவிடம், கமலா அவர்கள் தலை மறைந்த பின் எரிந்து விழுந்தாள்.

''ஏனம்மா, உனக்கு உலகமே தெரி யல்லே....? இப்படிச் சொல்லி அனுப்பி விட்டாயே ?'' என்றாள் அவள்.

பாகீரதி வெறுப்புடன் பெண்ணைப் பார்த்தாள்.

''எனக்கு உலகம்னு என்னன்னு தெரியாமல் போனப் போகட்டும்டி, கமலா!'' என்றாள் அவள். **(தொடரும்)**

# ஒய்யாரக் கொண்டையாம்... தாழம்பூவாம்



ஜெகசிற்பியன்

சிவப்பிரகாசம் தம்முடைய மனைவி கண்ணம்மாவிடம் ஒரு பெரிய போராட்டமே நடத்த வேண்டியதாகி விட்டது. "நான் தான் அந்தப் பெண் கிட்ட எல்லா விவரங்களையும் சொல்லி விட்டேன் என்கிறேனே! திரும்பத் திரும்ப ஏன் இப்படி என் உயிரைப் பிரிகட்டி இழுக்கிறே?" என்று சற்றுக் கோபமாக இரைந்தார் அவர்.

"என்னென்ன சொன்னீங்களாம்? அதைத் தானே கேட்கிறேன்!" என்று கண்ணம்மாவும் 'இரண்டு களைச் சவுக்கத்தில் அரை இடம் தள்ளி'த் தன் பல்லவி எடுப்பைத் தொடர்ந்தாள்.

"வாடகை எண்பது ரூபாய்; மூணு மாசத்துப் பணத்தை அட்வான்ஸாக் கொடுக்கணும்னு சொன்னேன்."

"அதுக்கு அவள் என்ன சொன்னாள்?"

"சரின்னு ஒப்புத்துக்கிட்டாள்."

"நீங்க ஏன் மூணு மாசத்துப் பணத்தை முன்னாடி கேட்டீங்க?"

"பின்னே, ஆறு மாசத்துக்குக் கேட்கச் சொல்றியா?"

"இல்லே; ஒரு மாசத்து வாடகையை முன் பணமா வாங்கினாப் போதும் என்கிறேன்."

சிவப்பிரகாசம் அவளை வியப்புடன் ஏறிட்டுப் பார்த்து, "ஏன் இப்படி? இதுக்கு முன்னால் குடி வந்தவங்ககிட்டே யெல்லாம் வாய் கூசாமல் ஒரு வருஷத்து அட்வான்ஸ் கேட்டு, ஆறு மாசத்து வாடகையையாவது கறந்துடுவியே!" என்றார்.

"ஆமாம்; அந்த அநுபவத்திலேதான் இப்ப அது மாதிரி வேணும்னு சொல்றேன். மூணு மாசம், ஆறு மாசம்னு முன் பணம் வாங்கிக்கிட்டா, அப்புறம் அவங்க வந்து என்ன அக்கிரமம், அழிச்சாட்டியம் பண்ணினாலும் பொறுத்துக்க வேண்டியிருக்குது. நினைச்சப்ப உடனே காலி பண்ணச் சொல்ல முடியறதில்லே. அப்படிச் சொன்னால் வாங்கின அட்வான்ஸ் பணத்தைத் திருப்பிக் கொடுத்தாகணுமே! அந்த நிலைமையில் நாம் எந்தக் காலத்திலே இருந்திருக்கிறோம்? இதை அவங்களும் புரிஞ்சுக்கிட்டு இன்னும் அதிகமாக் கொட்டமடிக்க ஆரம்பிச்சுடறாங்க. அது மாதிரி தொல்லே யெல்லாம் வேணாம்னுதான் இனி ஒரு மாசத்து அட்வான்ஸுக்கு மேலே வாங்கிறதில்லேன்னு தீர்மானிச்சுட்டேன்."

கண்ணம்மாவின் இந்த விஸ்தாரமான ஆவர்த்தனத்தில் அடங்கிச் சேர்ந்து கொண்டு தலையாட்டிய சிவப்பிரகாசம், "ஓ.... அப்படியா? சரி; ஒரு மாசத்து அட்வான்ஸ் மட்டும் வாங்கிட்டாப் போச்சு!" என்று முணுமுணுத்தார்.

"அப்புறம் என்ன சொன்னீங்க?"

"மாசம் பிறந்து ரெண்டாந் தேதிடான்னு வாடகைப் பணம் வந்துடணும். அதையும்...."

"அதையும்?"

"என்கிட்டே கொடுக்கப்படாது; என் தர்மபத்தினி கண்ணம்மா தேவியிடம் கொடுக்கணும். அதுக்குண்டான ரசீதை அவளோட அருமை மகள் சுந்தரியிடம் வாங்கிக்கணும்...."

"சரி; பிறகு?"

"மாடி வராந்தாவிலே துணி காயப் போடக் கூடாது; ராத்திரி பத்து மணிக்கெல்லாம் விளக்குகளை அணைச்சுடணும்; இல்லேன்னா, மெயினை ஆஃப் பண்ணிப்பிடுவோம்; வெளியே போகும் போதும் வரும்போதும் மறக்காமல் 'கேட்'டைச் சாத்தணும்..."

"போதும், போதும்!" என்று பொறுமை இழந்து குறுக்கிட்டாள் கண்ணம்மா. "நீங்க சொன்னதெல்லாம் கிடக்கட்டும்; அவள் கிட்டே என்னென்ன கேட்டீங்க? அதைச் சொல்லுங்க!"

"நாம கேட்கிறதுக்கு என்ன இருக்கு...?" என்று இழுத்தார் சிவப்பிரகாசம்.

"அப்படீன்னு நீங்க ஒண்ணுமே கேட்கலியா?"

"கேட்டேன், சும்மா ரெண்டொரு தகவல்..."

"என்ன கேட்டீங்க?"

சிவப்பிரகாசம் கொஞ்சம் ஞாபக மறதிக்காரர். அதனால் தாம் கேட்ட விவரங்களை நினைவுக்குக் கொண்டு வர உத்தரத்தை அண்ணாந்து பார்த்தார்.

"அந்தப் பெண்ணுக்குக் கல்யாணமாயிடுச்சான்னு கேட்டீங்களா?" என்று கண்ணம்மாவே அவரது நினைவு நரம்பைக் கண்டி இழுத்தாள்.

"கேட்கலே! என்ன, அது பார்த்தப்பவே தெரிஞ்சு போச்சு, அவள் கல்யாணமாகாத பெண்ணுன்னு."

''அதிலே மட்டும் நீங்க எப்பவுமே ரொம்பச் சுறுசுறுப்பா இருப்பீங்கன்னு எனக்குத் தெரியுமே!'' என்று ஒரு சொடுக்குச் சொடுக்கினாள் கண்ணம்மா. ''அவள் பேரு என்ன? அவளுக்கு அம்மா, அப்பா, கூடப் பிறந்தவங்க இருக்கிறாங்களா? இல்லே, தனிக்கட்டையா?''

''பேரு தேவகி! அப்பா இல்லையாம். அம்மாக்காரியோடுதான் இங்கே குடிவரப் போகிறாளாம்.''

''கூடப் பிறந்தவங்க?''

''ஒரே ஒருத்தன் அண்ணன்காரன்.''

''அவனுக்குக் கல்யாணமாகிச்சாமா?''

''இல்லே.....''

''ஐயையே!''

''எதுக்கு இப்படி அலறுறே?''

''அவனும்தானே வருவான்?''

''வர மாட்டான். வெளியூரிலே வேலையாயிருக்கிறானாம்.''

''வெளியூர்னா எங்கே? லண்டனா, பாரிஸா, ரங்கோனா, சிங்கப்பூரா?''

''இங்கே, நெல்லிக் குப்பத்துக்குப் பக்கத்திலே ஒரு சின்ன ஸ்டேஷனில் புக்கிங் கிளார்க்காக இருக்கிறானாம்.''

''சரி; அப்புறம் அந்தப் பெண் எவ்வளவு படிச்சவன்னு கேட்டீங்களா?''

''இல்லே; செய்யற வேலையை மட்டும் அவளே சொன்னாள். ஏதோ எலெக்ட்ரிக் பிளக்குகள் பண்ற கம்பெனி ஒண்ணிலே வேலையாம். மாசம் நூத்தம்பது ரூபாய் சம்பளம்.''

''இவ்வளவுதானா?''

''நீ ஏன் அதுக்குக் கவலைப்படறே?''

''நூத்தம்பது ரூபா சம்பாதிக்கிறவள் எண்பது ரூபா வாடகையில் வீடு பார்த்திருக்கிறாளே, இது உங்கள் புத்தியில் படலியா? வாடகைப் பணம் எண்பது போக மீதமிருக்கிற எழுபது ரூபாயில் ரெண்டு பேர் இந்தக் காலத்திலே வாழ்ந்துவிட முடியுமா?''

''முடியுமோ முடியாதோ, அது அவள் பாடு! மாசம் பிறந்து ரெண்டாந் தேதி நமக்கு வாடகைப் பணம் வரணும், அவ்வளவுதானே? மேலும், அவள் ஒருத்தியின் வருமானத்தை/ வைச்சு மொத்தச் செலவுக்கும் ஏன் கணக்குப் போடறே? பத்தாக் குறையை நிரவிக்க அண்ணன்காரன் பணம் அனுப்பி உதவி வரலாம் இல்லையா?''

''அசட்டுத்தனமாப் பேசாதீங்க! காலம் கெட்டுக் கிடக்குது. வீடு பிடிக்கிறதுக்காக, அங்கே வேலே, இங்கே உத்தியோகம்னு கௌரவமா சொல்லுவாங்க; உள்ளே வந்தப்புறம்தான் தெரியும் அவங்களோட சுய ரூபம்.''

''சண்டைக்காரியா விருப்பாளோன்னு பயப்படறியா? அந்த விஷயத்திலே உன் கிட்டே எந்தச் சண்டி ராணி வந்தாலும் முதுகிலே டின்னு கட்டிக்கிட்டு ஓடிப்போயிடுவாளே!''

''கிண்டலா பண்ணறீங்க?'' என்று 'நங்கு' காட்டினாள் கண்ணம்மா. ''நான் என்ன சொல்றேன்னா, தாயை மட்டும் வைச்சுக்கிட்டுத் தனி வீடு பார்க்க வருகிறவள் நல்ல மாதிரி நடத்தை யுள்ளவளா யிருப்பாளோன்னு....''

''சேச்சே! அந்தப் பெண்ணைப் பார்த்தால் அப்படித் தோணலே. நீயும் ஒரு வயசுப் பெண்ணை வைச்சுக்கிட்டு ஊரார் பெண்கள் மேலே எடுத்த எடுப்பில் மோசமாக் கற்பனை பண்ணாதே, பாவம்!''

இந்தச் சமயம், சமையலறையிலிருந்து கரண்டியும் கையுமாக வெளிப்பட்ட ஓர் அழகிய இளம் பெண், ''அம்மா! சாதத்தை வடிச்சுட்டேன்; ரசத்தைத் துவட்டட்டுமா?'' என்று கேட்டாள். அவள்தான் சிவப்பிரகாசத்தின் ஒரே மகள் சுந்தரி. குடும்பப் பதவிசான தோற்றத்துடன் விளங்கிய அவள் எட்டாம் வகுப்போடு படிப்பை நிறுத்தி விட்டு அம்மாவுக்கு உதவியாக வீட்டோடு இருக்கிறாள். பதினேழு அல்லது பதினெட்டு வயசு இருக்கும்.

''ஸ்டவ்வைக் கொஞ்ச நேரம் தணிச்சு வைச்சுடு கண்ணு! நான் வந்து மத்த வேலைகளைக் கவனிச்சுக்கறேன்'' என்று கொஞ்சலாகப் பதிலிறுத்த கண்ணம்மா, ''குழந்தை காலம்பற பிடிச்சு எவ்வளவு வேலே செய்யும்? உதவிக்கு ஒரு வேலைக்காரியை வெச்சுக்க முடியறதா இந்த வீட்டிலே?'' என்றாள் சலிப்புடன்.

சிவப்பிரகாசம் இதைக் காதில் வாங்கிக் கொள்ளாமல் வேறேதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்தார்.



''ஆமாம், இந்தப் பெண்ணுக்கு வயசு என்ன இருக்கும்?'' என்று தான் விட்ட இடத்திலிருந்து பேச்சைத் தொடர்ந்தாள் கண்ணம்மா.

'இன்னமும் குறுக்கு விசாரணை முடியலையா?' என்று மனத்துக்குள் சலித்துக்கொண்ட சிவப்பிரகாசம், ''வயசா? நீயும்தானே அவளைப் பார்த்தே? ஒரு பெண்ணோட வயசை இன்னொரு பெண்ணால்தான் மதிப்பிட முடியும்!'' என்றார்.

''முப்பது இருக்குமா?''

''அது அதிகம். ஒரு பத்து வயசைக்



குறைச்சாத் தேவலைன்னு நினைக்கிறேன்.''

''ஆமாம்; என்னைத் தவிர மத்த எல்லாப் பெண்களும் உங்க கண்ணுக்கு இருபது வயசுக்கு மேலே தோணமாட்டாள்கள்!'' என்று சொய்த்தாள் கண்ணம்மா.

''எதுக்கு அதைக் கேட்கிறேன்னு, இவ்வளவு வயசாகியும் அந்தப் பெண் ஏன் கல்யாணம் பண்ணிக்காமல் இருக்கிறாள் என்பதைத் தெரிஞ்சுக்கத்தான்.''

''அது நாம் தெரிஞ்சுக்க வேண்டிய முக்கியமான விஷயமா?''

''இல்லையா, பின்னே? உங்களுக்கு எதுதான் முக்கியம்னு படுமோ தெரியலே.....''

''நல்ல மாப்பிள்ளை கிடைக்காததால் கல்யாணம் தள்ளிப் போய்க்கிட்டிருக்கும்னு நினைக்கக்கயேன்! இப்ப நம் பெண் சுந்தரியையும் அப்படித்தானே வெச்சுக்கிட்டு இருக்கிறோம்?''

''ஊரார் விஷயத்திலெல்லாம் என் மகளைச் சேர்த்து இழுக்காதீங்க! அவளுக்கு என்ன அப்படிக் கல்யாணம் செய்து வைக்கிற வயசாயிடுச்சு?''

''வாஸ்தவம்!'' என்று தணிந்து போய்த் தம் வழுக்கைத் தலையைத் தடவி விட்டுக் கொண்ட சிவப்பிரகாசம், ''சரி; விஷயத்தைப் பேசி முடி! மாடிப் போர்ஷனை அந்தப் பெண்ணுக்கே விட்டு விடலாமில்லே?'' என்றார்.

''வேறே என்ன செய்யறது? ஆறு மாசமா பூட்டுப் போட்டு வைச்சிருக்கிறோமே?''

''அதைத்தான் நானும் சொல்றேன். வாடகைக்கு வருகிறவங்களை நம்ம மாதிரி மனுசாளா நினைச்சு நடத்து. சுத்தக் குறைகளையே தேடிப் பிடிக்கப் பெரிசு பண்றதனாலே இங்கே வருகிற யாரும் ரெண்டு மாசத்துக்கு மேல் நிலைக்க மாட்டேங்கிறாங்க!'' என்று முணுமுணுத்தவாறே சட்

டென்று எழுந்து வெளியே புறப்பட்டு விட்டார் சிவப்பிரகாசம்.

வெள்ளம் வருமுன் அணை போட்டுக் கொள்வதில் வல்லவர் அவர்.

அடுத்த மாதம் முதல் தேதியன்று விடியற் காலை நாலரை மணிக்கெல்லாம் சிவப்பிரகாசத்தின் வீட்டு மாடிப்பகுதியில் தன் தாயாரோடு புதுக் குடித்தனம் வந்து புகுந்தாள் தேவகி.

மாதங்கள் இரண்டு சென்றன. புதிய வீடு; புதுக் குடித்தனக்காரர் என்ற நினைப்புக்கள் இருசாராரிடமிருந்தும் மறைந்து ஒரு சகஜ நிலை ஏற்படத் தொடங்கிய சமயம், அதிர்ஷ்டவசமாக இந்நாள் வரை கண்ணம்மா அந்தப் பெண் தேவகியின் மீது கொண்டிருந்த நல்லபிப்பிராயத்தைக் கலைத்துக் கொள்ளும் படியான துரதிர்ஷ்ட சம்பவம் ஒன்று நிகழ்ந்து விடவே, 'நான் முதலில் நினைத்த மாதிரி தான் இவள் இருப்பாள் போல் இருக்கிறது!' என்று தன் தீர்க்கதரிசனத்துக்குக் கிடைத்த ஒரு வெற்றியாக அதை எண்ணத் தலைப்பட்டு விட்டாள்.

அப்படி நிகழ்ந்த அந்தச் சம்பவம், அன்றிரவு ஒன்பது மணி வாக்கில் — ஊர்ச் சந்தடியெல்லாம் அடங்கிப் போன நேரத்தில் — தேவகி மாடியறையில் இருந்து கொண்டு மிகவும் இனிமையாக வீணை வாசித்ததுதான்.

அப்போது இரவு உணவுக்குப்பின் சிவப்பிரகாசமும், கண்ணம்மாவும் கீழே கூடத்து அறையில் உட்கார்ந்து தாம்பூலம் தரித்துக் கொண்டிருந்தார்கள். சுந்தரி தூங்கப் போய் விட்டாள்.

சிவப்பிரகாசம் ஓரளவு சங்கீத ரஸனை உள்ளவர். அந்த ரஸனை இருந்ததால்தான் அவர் தம் மனைவியின் மத்தள முழக்கம் போன்ற பேச்சுக் குரலால் பாதிக்கப்படாமல் எப்படியோ சமாளித்து வந்தார். அவள் பேச ஆரம்பித்து விட்டால் அதை ஒரு தாள வாத்தியக் கச்சேரியாக ரசிக்கும் பழக்கத்தையும் ஏற்படுத்திக் கொண்டிருந்தார். இப்படிப் பட்டவருக்குச் சற்றும் எதிர்பாராதவிதமாக மாடியிலிருந்து வெகு சுகமாய் மிதந்து வந்த வீணாகானத்தைக் கேட்டதும் பரம ஆனந்தமாகி விட்டது.

''அடடே! அந்தப் பெண்ணா இத்தனை அற்புதமா வீணை வாசிக்குது? இவ்வளவு நாளா எனக்கு இந்த விஷயம் தெரியாதே!''

கண்ணம்மா தன் முகமெல்லாம் கண்ணாக ஜ்வலிக்க அவரை விழித்துப் பார்த்தாள். பிறகு விருட்டென்று அங்கிருந்து எழுந்து படுக்கையறைக்குப் போய் விட்டாள்.

வீணாகான ரஸனையில் தம்மை மறந்திருந்த சிவப்பிரகாசம் சற்று நேரம் கழித்துத் திரும்பிப் பார்த்தபோது அங்கு கண்ணம்மா இல்லாததைக் கண்டு 'ஓ... இவளுக்கு இந்தச் சங்கதி பிடிக்கவில்லை போலும்' என்று எண்ணிக் கவலைப்படலானார். தானே முதல் நிலைமை எப்படி மாறப் போகிறது என்பது இப்போதே அவருக்குத் தெரிந்து போயிற்று.

கண்ணம்மாவுக்குத் தூக்கம் பிடிக்க வில்லை. மாடிக் குடித்தனக்காரி வீணை வாசித்தது பற்றியே அவள் எண்ணிக் குமுறிக் கொண்டிருந்தாள்.

''என்ன இது தொல்லை! தூங்கப் போகிற நேரத்திலே இப்படித் தலையில் அடிக்கிறாப் பலே வீணையைப் போத்தறாளே! குடிவந்த புதிசில் ரொம்பப் பதவிசா இருந்தவள் மெது மெதுவா சேஷ்டையை ஆரம்பிக்கிறாளாக்கும்! அக்கம் பக்கத்திலே இருக்கிறவங்க என்ன நினைப்பாங்க? இன்னிக்கு வீணை வாசிப்பாள்; நாளைக்குச் சங்கீதம் சாதகம் பண்ணுவாள்; அப்புறம் நாட்டியம், நாடக ஒத்திகைன்னு கூத்தடிக்கத் தொடங்கிட்டாள்னா என்ன பண்ணறது? பொழுது விடியட்டும், பேசிக் கொள்கிறேன்!''

மறு நாள் காலை தேவகி காரியாலயத்துக்குக் கிளம்பிக் கீழே வரும்போது வாசலில் மடக்கிக் கடுமையான எச்சரிக்கை விடுக்க வேண்டும் என்று தயாராகக் காத்துக் கொண்டிருந்த கண்ணம்மாவுக்கு ஓர் எதிர்பாராத தடங்கல் ஏற்பட்டது.

என்றைக்கும் வராத விருந்தாளி போல் பக்கத்துப் பங்களாவில் குடியிருக்கும் பெரிய அதிகாரி ஒருவரின் மனைவி, கல்லூரியில் படிக்கும் தம் மகளுடன் கண்ணம்மாவைப் பார்க்க வந்தாள். வைரமும் வைடூரியமுமாகப் பளபளத்த அவர்கள் தன் வீடு தேடி வந்ததைக் கண்டு திகைத்துப் பின் பெருமையால் பூரித்துப்போன கண்ணம்மா, அவர்களை எதிர் சென்று வரவேற்றுக் கூடத்து அறையில் உட்கார வைத்தாள்.

பொதுவாக இரண்டொரு வார்த்தைகள் பேசிவிட்டுப் பிறகு தான் வந்த விஷயமாய்ப் பேச்சைத் திருப்பினாள் அந்த அம்மாள். ''ஆமாம், நேற்று ராத்திரி உங்க வீட்டிலே யாரோ வீணை வாசிச்சாங்களே, அது யாரு?'' என்று கேட்டாள்.

கண்ணம்மாவுக்குப் பகீரென்றாகியது. 'நேற்றிரவு உன் வீட்டு மாடியிலே வீணை வாசித்ததால் எங்கள் தூக்கம் கெட்டுப் போயிற்று' என்று அந்தப் பெரிய அதிகாரியின் மனைவி புகார் பண்ண வந்திருக்கிறாளோ என்று பயந்து போனாள் அவள். உடனே அவளுக்குத் தேவகியின் மேல் ஆத்திரம் ஆத்திரமாக வந்தது. தன்னை ஒருவாறு சமாளித்துக் கொண்டு, ''அதுவுங்களா?.... இங்கே என் வீட்டு மாடியிலே ஒரு பெண் புதுசாக் குடி வந்திருக்கிறாள். இத்தனை நாள் இல்லாம நேத்து திடீர்னு அந்தப் பெண்ணு..'' என்று மென்று விழுங்கிக் குழறினாள்.

''அப்படியா? நான் உங்கள் மகள்தான் வாசிக்கிறாள்னு நினைச்சேன்.''

''ஐயையே!.... அந்த மாதிரி....''

''அதானே பார்த்தேன். யார் அந்தப் பெண் ? ரொம்ப அற்புதமா வாசிக்கிறாளே! அதிகாரிகூட வெகுவாக ரசித்துக் கேட்டுக் கிட்டு இருந்தார். வீணையில் பெரிய வித்வஸியா அவள்?''

கண்ணம்மாவுக்கு ஒன்றும் புரியவில்லை. பேந்தப் பேந்த விழித்தாள்.

''நான் இப்ப எதற்கு வந்தேன்னா, அந்தப் பெண்ணைக் கொண்டு என் மகளுக்கு வீணை சொல்லி வைக்க முடியுமான்னு கேட்கத்தான்! அதிகாரியும் இதை விரும்பறார். இந்தப் பெண்ணும் ராத்திரியிலிருந்து ஒரே பிடிவாதமா என்னைத் தொந்தரவு பண்றாள்.

# ஆயுள் இன்சூரன்சு
# அவனுடைய கல்விக்கு
# உறுதியளிக்கிறது






உங்கள் அன்புச் செல்வன் உயர் கல்விபெற வேண்டுமென நீங்கள் விரும்புவது இயற்கையே. ஆனால் அதற்குத் தேவையான பணம் உங்களிடம் இருக்கிறதா?

எல்.ஐ.சியின் 'கல்வி ஆண்டுத் தொகைப் பாலிசி' கல்லூரிப் படிப்பிற்காகும் செலவிற்குப் பொறுப்பேற்கின்றது. தேர்ந்தெடுக்கப்பட்ட வயதினை அவன் அடையும் போது, ஒழுங்கான தவணை முறையில் 5 ஆண்டுக் காலத்திற்குப் பணம் பெற இந்தப் பாலிசி வகை செய்கிறது — பாலிசி முதிர்வடையும்போது நீங்கள் இல்லாது போயினும் கூட.

எடுத்துக் காட்டாக, 30 வயது இளைஞர் ஒருவர் 15 ஆண்டுகளுக்கான (காப்புத் தொகை ரூ. 4,000) 'கல்வி ஆண்டுத்தொகைப்பாலிசி' ஒன்று எடுக்கிறார் என வைத்துக் கொள்வோம். அதற்காக அவர் பிரீமியமாக மாதந்தோறும் செலுத்துவது ரூ. 20/- மட்டுமே. ஆறு மாதத்திற்கு ஒருமுறை ரூ. 400/- வீதம் 5 ஆண்டுக் காலத்திற்கு தனது படிப்பிற்குத் தேவைப்படும் இப்பணத்தை அவருடைய மகன் பெறுவான்.

உங்கள் குழந்தையின் கல்விக்கு உத்திரவாதமளிக்கும் திட்டம் தான் இது. முழு விவரங்களுக்கு எல்.ஐ.சி. முகவரை (ஏஜெண்ட்) நாடுக இன்றே.



**ஆயுள் இன்சூரன்சு** போல
ஆதரவு தருவது எதுவுமே இல்லை

அவளுக்குச் சௌகரியமான வேளையிலே ஓர் அரை மணி நேரம் டியூஷன் எடுத்தால் போதும்; கேட்டால் ஒப்புவாளா?'' என்று ஆவலும் குழைவுமாக விசாரித்தாள் அதிகாரியின் மனைவி.

இப்போதும் கண்ணம்மாவுக்கு என்ன சொல்வதென்றே தோன்றவில்லை. பிரமித்துப் போய் நின்றாள்.

''சரி; நீங்களே அந்தப் பெண்ணிடம் கேட்டு எங்களுக்கு இந்த ஏற்பாட்டைச் செய்து கொடுத்தால் உங்களுக்கு நாங்கள் ரொம்பவும் கடமைப்பட்டிருப்போம். முயற்சி பண்ணிப் பாருங்க'' என்று சொல்லி அந்தப் பெரிய இடத்துப் பெண்மணிகள் விடை பெற்றுச் சென்றார்கள்.

வியப்பும் திகைப்புமாக நின்றாள் கண்ணம்மா. வீணை வாசிக்கத் தெரிந்திருப்பதில் இவ்வளவு பெருமை உண்டா என்று அவள் தன்னைத் தானே கேட்டுக் கொண்டாள். அவளுக்கு இது இந்நாள் வரை தெரியாத ஒரு விஷயமாய் இருந்தது. நேற்றிரவு அந்தப் பெண்ணின் வீணை வாசிப்பைக் கேட்டுத் தன் கணவர் மெய்ம்மறந்து போனதையும் இப்போது நினைத்துப் பார்த்தாள். தனக்குத் தெரியாத விஷயம் ஒன்றை அவர் தெரிந்து வைத்திருப்பார் என்று அவள் ஒருபோதும் நம்பியதே இல்லை. இப்போது அதை நம்பும் படியாகி விட்டதே என்று உள்ளூற வெட்கப் பட்டுக் கொண்டாள்.

உடனே அவளுக்கு ஒரு யோசனை தோன்றியது. 'அவள் மட்டுமென்ன வீணை வாசிப்பது? அவளால்தான் அது ஆகுமோ? என் பெண் சுந்தரிக்கும் வீணை கற்றுத் தந்தால் போயிற்று! ஆறே மாசத்தில் சுந்தரி கற்றுக் கொண்டு விடுவாள்! பாயசம் பண்ண அவள் ஒரே நாளில் என்னிடம் தெரிந்து கொண்டு விட்டாளே!...அப்புறம் பக்கத்துப் பங்களா அதிகாரியின் பெண்ணுக்கு அவளை வைத்தே டியூஷன் எடுக்கச் சொல்லிவிடலாம்! அதைப் பார்த்து இன்னும் பல பெரிய மனிதர் வீட்டுப் பெண்களெல்லாம் என் பெண்ணைத் தேடிக்கொண்டு வருவார்கள்!'

அன்றிரவு இது பற்றித் தன் கணவரிடம் பிரஸ்தாபித்தாள் கண்ணம்மா. அதைக் கேட்டுச் சிவப்பிரகாசம் வியப்பில் ஆழ்ந்தார். சமையலுக்காகவும், சிற்றுண்டிக்காகவும் தினமும் மாவாட்டி மசாலா அரைத்துக் கைவிரல்களெல்லாம் காய்ப்புத் தட்டிப் போய்க் கிடக்கும் தம் மகள் சுந்தரி வீணையின் மெல்லிய நரம்புகளை மீட்டப் போகும் அந்தக் காட்சியைக் கற்பனைக் கண் கொண்டு பார்த்தபோது அவருக்குத் தம்மையும் மீறிய ஒரு நடுக்கம் ஏற்பட்டு விட்டது. ஆனாலும் அதை வெளியே காட்டிக் கொள்ளாமல், ''வீணைதானே ?..... பேஷாகச் சொல்லி வை!'' என்று உத்தரவு கொடுத்து விட்டார்.

தன் மகளிடம் ஒரு வார்த்தை கேட்டு அவளது விருப்பத்தை அறியலாம் என்று எண்ணிச் சுந்தரியைக் கூப்பிட்டு விஷயத்தை விளக்கினாள் கண்ணம்மா.




''ஐயையே! வீணையா கத்துக்கச் சொல்றே? நான் மாட்டேன். எனக்கு அதெல்லாம் பிடிக்காது. வீணை, பாட்டு, நாட்டியம் இதுகளைச் சினிமாக்காரங்க தானே கத்துக்குவாங்க? என்னைச் சினிமாவிலே நடிக்க விடப் போறியா என்ன? யார் காதிலாச்சும் விழப் போகுது. அசிங்கம்! கேவலமா நினைப்பாங்க!'' என்று சர்வ அருவருப்புடன் சொல்லி முகத்தைச் சுளித்தாள் சுந்தரி.

கண்ணம்மா இதைக் கேட்டு அப்படியே பூரித்துப் போனாள். ''அடி என் ராசாத்தி! நான் சும்மா விளையாட்டுக்குத்தான் சொன்னேன். அதெல்லாம் நமக்குச் சரிப்படுமா? நீ போய்ப் படுத்துக்க, கண்ணு!'' என்று அன்பொழுகச் சொன்னாள். மகளின் இந்தக் குடும்பச் சீலமான மனப்பான்மை அறிந்து அவளுக்கு ஒரே பரவசமாகி விட்டது. அத்துடன் பக்கத்துப் பங்களா அதிகாரியின் மனைவியின் மீது இப்போது ரொம்ப மட்டமான அபிப்பிராயமும் ஏற்பட்டுப் போயிற்று.

இவ்வளவுக்கும் சிவப்பிரகாசம் வாய் திறக்கவில்லை. யோக நிஷ்டையில் ஆழ்ந்தவர் போல் கண் மூடிச் சோபாவில் சாய்ந்திருந்தார் அவர்.

தேவகி தினமும் இரவு நேரங்களில் வீணை வாசிப்பதை வழக்கமாக வைத்துக் கொள்ளவில்லை. வாரத்துக்கு ஒரு முறையோ, இரு முறையோதான் வாசிப்பாள். சில சமயம் பத்துப் பதினைந்து நாட்களுக்கு வீணையைத் தொடாமலும் இருந்து விடுவாள். இதனால் கண்ணம்மா இவ்விஷயத்தை அதிகம் பொருட்படுத்தாமல் விட்டு விட்டாள். ஆனாலும் மாடியில் எப்போதாவது வீணை ஒலி கேட்கும் போதெல்லாம் அவள் எரிச்சல் அடைவாள்; சபிப்பாள். தன் கணவரைக் காரண காரியமில்லாமல் திட்ட ஆரம்பிப்பாள்.

பக்கத்துப் பங்களா அதிகாரியின் மனைவியே ஒரு நாள் நேரில் வந்து தேவகியைப் பார்த்துத் தம் மகளுக்கு வீணை டியூஷன் எடுக்க வேண்டும் என்று வேண்டிக் கொண்டாள். பிறருக்குக் கற்றுத் தரும் அளவு வீணையில் தான் தேர்ச்சி பெற்றவள் அல்ல என்றும், அப்படியே சொல்லித் தருவதானாலும் அதற்கான நேரம் தனக்கு இல்லையென்றும் பணிவுடன் கூறி மறுத்து விட்டாள் தேவகி.

இந்த விவரத்தைக் கேள்விப்பட்ட கண்ணம்மா நிம்மதியடைந்தாள்.

சிவப்பிரகாசத்தின் வீடு தேவகியைப் பொறுத்த வரையில் ரொம்ப ராசியாகத்தான் இருந்தது. காரணம், அவள் இங்கு வந்த இரண்டாம் மாதம் சம்பள உயர்வு பெற்றாள்: பிறகு எதிர்பாராத விதமாக ஆறுமாத போனசும் கிடைத்தது. அந்தப் பணத்தில் நகை நட்டுக்களும் துணிமணிகளும் நிறைய வாங்கினாள். ஒரு நாளைக்கு ஒரு டிரஸ் பண்ணிக் கொண்டு அழகு வழிய ஆபீஸுக்குப் போய் வந்தாள்.

## ஆகாத வீடு

போபாலில் உள்ள 'அயிஞ் பங்களா' என்ற வீட்டில் குடியேறியவர்கள் உருப்பட்டது கிடையாதாம். குடியேறிய முதலமைச்சர் ரவிசங்கர் சுக்லா இரண்டு மாதங்களில் காலமானார். அடுத்து வந்த கட்ஜூ தேர்தலில் தோற்று வெளியேறினார். அடுத்தவரான மாண்டலோய் பதினெட்டு மாதங்களில் பதவி இழந்தார். டி.பி. மிஸ்ரா, ''இந்த வீடு எனக்கு வேண்டாம்'' என்று நண்பர் வீட்டில் இருந்தார். பிறகு வந்த ஓர் அமைச்சர், வீட்டின் வாசற்படியை மாற்றி அமைத்தும், பதவி இழந்தார். இப்பொழுது வந்திருக்கும் இட்ட அமைச்சர் வீரேந்திரபகதூர் சிங் வீட்டு வாசலில் ஓர் ஆட்டைப் பலி கொடுத்ததுமல்லாமல் வீட்டின் பெயரைச் 'சிவகுடி' என்று மாற்றி விட்டாராம்.

ஆதாரம்: 'ஹிந்துஸ்தான் டைம்ஸ்'
தகவல்: பாலி

---

இதையெல்லாம் கண்குத்திப் பாம்புபோல் கவனித்துக் கொண்டிருந்த கண்ணம்மாவுக்கு மனக்காய்ச்சல் எடுத்து விட்டது. தேவகி புதுப் புது ரகமான புடவைகளும், நவீன ரக அணிமணிகளும் அணிந்து செல்வதைப் பார்த்து அவை போன்று தன் மகளுக்கும் வாங்கித் தந்து அழகு பார்க்க வேண்டும் என்று மனம் பதைப்பாள். ஆனால் அதற்கெல்லாம் தன் கணவரிடமிருந்து பணம் பெயர்ப்பது அவ்வளவு சுலபமல்ல என்பதும் அவளுக்குத் தெரியும். அதனால் அவளைக் கரித்துக் கொட்டிச் சாடுவதோடு திருப்தி அடைந்து விடுவாள்.

தேவகிக்கு ஏராளமான சிநேகிதிகள் இருந்தார்கள். எளிய குடும்பத்துப் பெண்கள் முதல் பெரும் பணக்கார வீட்டுப் பெண்கள் வரை அவளைப் பார்க்க வருவார்கள். சில சமயம் ஆண் நண்பர்களும் வருவதுண்டு. அவர்கள் அவளோடு காரியாலயத்தில் வேலை செய்பவர்களாகவோ, படித்தவர்களாகவோ இருப்பார்கள். இப்படிப்பட்டவர்களில் யாராவது ஒருவர் அல்லது இருவர் தினமும் அவளைப் பார்க்க வரத் தவறுவதில்லை. இந்த விஷயத்திலும் கண்ணம்மாவுக்குக் கடுப்பு முற்றியது. ஆனால் ஓர் அற்பமான பெருமைக்காக அவள் பொறுத்துக் கொண்டாள்.

ஆமாம்; தேவகியைப் பார்க்கவரும் பெரிய இடத்துப் பெண்கள் அழகழகான கார்களில் வருவார்கள். அவளோடு பேசி முடித்துப் போகும்வரை அவர்களது கார்கள் கண்ணம்மாவின் வீட்டெதிரே நிற்கும். இது அவளுக்குப் பெருமை. தன் வீட்டில் கார் நிற்பதை அக்கம் பக்கத்து வீட்டார் எட்டி எட்டிப் பார்ப்பதில் ஒரு சந்தோஷம். மனித மனத்தில் இருக்கும் எத்தனையோ சில்லறைத் திருப்திகளில் இது ஒன்று.

எனினும் இதிலே ஒரு விஷயத்தில் மட்டும் அவள் பெரிதும் அருவை அடைந்தாள். அது தேவகியைப் பார்க்க வரும் வாலிபன் ஒருவனைப் பற்றியது.

அவன் அழகான வாலிபன். உல்லாசமான நடைஉடை பாவனைகள் கொண்டவன். ஸ்கூட்டரில் குஷியாக வருவான். அவன் வந்து விட்டால் மாடியில் ஒரே பேச்சும் சிரிப்பும் கும்மாளமுமாக இருக்கும். சில சமயம் தேவகி அவனுக்கு வீணை வாசித்தும் காட்டுவாள்.

அந்த வாலிபனின் பெயர் சந்திரன். ஆரம்பத்தில் அவன் மாதம் ஒரு முறைதான் வந்து கொண்டிருந்தான். பிறகு இரண்டு வாரத்துக்கு ஒரு முறை என்றாகி அப்புறம் வாரம் ஒரு முறை ஆயிற்று. இப்போதோ மூன்று நாட்களுக்கொரு தரம் தவறாமல் வந்து போகிறான். சில சமயம் அவனோடு சேர்ந்து தேவகியும் வெளியே போவாள்; அவனது ஸ்கூட்டருக்குப் பின்னால் உட்கார்ந்து.

இதையெல்லாம் வெகு உன்னிப்பாகக் கவனித்து வந்தாள் கண்ணம்மா. அவளுடைய கற்பனைகளும் அநுமானங்களும் அகண்டாகாரமாகக் கிளைத்தன. அவை தாங்க முடியாத அளவு வளர்ந்து போகவே, ஒரு நாள் துணிந்து தேவகியிடமே அவள் கேட்டு விட்டாள் :

''யாரு அந்தப் பிள்ளையாண்டான், இங்கே அடிக்கடி வரானே?''

''அவர் எங்கள் குடும்பத்துக்கு மிகவும் வேண்டியவர். என் அண்ணாவின் பாலிய சிநேகிதர்.''

தேவகியின் இந்தச் சமாதானத்தைக் கண்ணம்மா ஏற்பாளா? ஆனால் மறுத்து வாதிடவும் முடியவில்லை. 'குடும்ப நண்பன்' என்று சொன்ன பிறகு, அவனை வரக் கூடாதெனத் தடை விதிக்க என்னதான் வீட்டுச் சொந்தக்காரியாக இருந்தாலும் முடியுமா? மேலும், அந்தச் சந்திரனும் தேவகியும் பேசிப் பழகுகிற விதத்தை எப்படிக் கண்ணை மாற்றிப் போட்டுப் பார்த்தாலும் ரஸப் பிசகாக எதுவும் தெரியவில்லை என்பது அவளுக்கு இதில் உள்ள இன்னொரு சங்கடம். ஸ்கூட்டரில் போவது ஒன்றை மட்டும் வைத்துக் கொண்டு குறை சொல்லி விடலாமா? இந்தக் காலத்தில் மாமியாரை மருமகள் ஸ்கூட்டருக்குப் பின்னால் ஏற்றிச் செல்வதுகூட ஒரு 'பாஷன்' ஆயிற்றே!

ஆக, கொஞ்சம் விட்டுப் பிடிக்கலாம் என்று பொறுமையோடு காத்திருப்பதைத் தவிர கண்ணம்மாவுக்கு வேறு வழியேதும் புலப்படவில்லை.

சிவப்பிரகாசம் இப்போதெல்லாம் ஏதோ கவலையில் ஆழ்ந்திருப்பவர்போல் காணப்பட்டார். அவரின் கவலைக்குரிய காரணம் வெகு சீக்கிரமே வெளிப்பட்டது. தம் மகள் சுந்தரிக்கு வயது பதினெட்டாகியும் இன்னும் கல்யாணம் செய்து வைக்காமல் வீட்டோடு வைத்துக் கொண்டிருக்கிறோமே என்ற கவலை அது. அவரும் கடந்த மூன்று மாதங்களாக எங்கெங்கோ முயற்சி பண்ணிக் கொண்டு தான் இருந்தார். ஆனால் ஓரிடத்திலும் நல்ல வரனைக் குதிரவில்லை.

''நீங்க ஏன் இந்தப் பெண்ணுக்குக் கல்யாணம் பண்ணி வைக்க இவ்வளவு அவசரப்படறீங்க?'' என்று ஒரு நாள் சீறினாள் கண்ணம்மா.

''பின்னே, அது அவசரமில்லையா?'' என்றார் சிவப்பிரகாசம் அமைதியாக.

''அதைத்தான் ஏன்னு கேட்கிறேன்?''

'' அவள் அடிக்கடி கோயிலுக்குப் போகிறாளே, நீ கவனிக்கவில்லையா ?''

''ஒரு வயசுப் பெண் கோயிலுக்குப் போனால் கல்யாண வரம் கேட்டுப் பிள்ளையாரைச் சுத்தத்தான் போவான்னு தீர்மானிக்கட வேண்டியதுதானா? உங்க பெண்ணோட குணப் போக்கு, மனப்போக்கு எதுவும் உங்களுக்குத் தெரியறதில்லையா? அவளுக்கு அதிலெல்லாம் நாட்டமே இல்லை. மண்ணுமாதிரி கிடக்குது அது....''

''சரி; அப்படியே இருக்கட்டும். அதற்காக நாமும் பேசாமல் இருந்துட வேண்டியது தானா? வயசு பதினெட்டாகுதே !''

''என்ன சொன்னீங்க, பதினெட்டா?'' என்று கண்களை அகல விரித்தாள் கண்ணம்மா. ''அது குழந்தைப் பெண்; போன மாசம்தான் பதினேழு முடிஞ்சு பதினெட்டு ஆரம்பமாகியிருக்குது! இதுக்குள்ளாற கல்யாணம் பண்ணி, குழந்தை குட்டிகளைப் பெத்துட வைச்சுட்டா அவள் உடம்பு என்னத்துக்கு ஆகும்? ஊர், உலகத்திலே முப்பது, நாப்பது வயசு வரைகூடக் கல்யாணம் பண்ணிக்காம டாக்டரிக்கட் போய்க் கிடக்கிறாங்களே, பார்க்கலே? அவசரப்பட்டுக் குழந்தைப் பெண்ணை எந்தப் பாழுங் கிணற்றிலாவது தள்ளிட்டா அப்புறம் காலத்துக்கும் கண்ணீர் விடறது யாரு?''

பெண்ணைப் பெற்ற அப்பாவிடமே பெண்ணின் வயசில் மூன்றைக் குறைத்துச் சொல்லும் தாய் மனத்தின் குறளித்தனத்தை எண்ணி உள்ளூறச் சிரித்தபடி வாயை இறுக மூடிக் கொண்டு மௌனச் சாமியாரானார் சிவப்பிரகாசம்.

சந்திரன் தேவகியைப் பார்க்க வருவது தங்கு தடையின்றி நடந்து கொண்டுதான் இருந்தது. இப்போது அவன் அடிக்கடி வந்து, அதிக நேரம் இருந்து விட்டுப் போகிறான்.

கண்ணம்மாவின் பொறுமை எல்லை மீறியது. அவளால் இந்த நிலவரத்தைக் கொஞ்சமும் சகிக்கமுடியவில்லை. இதற்கு இன்னொரு காரணம், அவளின் அருமை மகள் சுந்தரியும் அதை அடியோடு வெறுக்கிறாள் என்பது ஜாடைமாடையாகத் தெரிய வந்ததே!

சந்திரன் தேவகியைப் பார்க்க வரும்போது சுந்தரி வராந்தாவிலோ, வாசலிலோ, கூடத்து அறையிலோ இருந்தாளானால் சட்டென்று பாய்ந்து போய்த் தன் அறையில் புகுந்து மறைந்து கொள்வாள். பிறகு அவன் புறப்பட்டுப் போகும் வரை வெளியில் தலை காட்ட மாட்டாள். வயசுப் பெண்ணாயிற்றே! ஒரு வாலிபன் ஒரு வாலிபப் பெண்ணைத் தேடி வருவதை இன்னொரு வாலிபப் பெண் பார்த்துக் கொண்டிருப்பதென்றால் சங்கடமாயிருக்காதா?

இது பற்றிப் பல நாட்கள் யோசித்து இறுதியில் ஒரு முடிவுக்கு வந்தாள் கண்ணம்மா. அதாவது, அந்தப் பையன் சந்திரன் வந்து தேவகியுடன் அரட்டை அடித்துக் கொண்டிருக்கும்போது திடீரென்று மாடிக்குப் போய் அவர்களுடைய நடவடிக்கைகளை நோட்டம் விடுவது என்ற தீர்மானமே அது. அப்படி ஏதாவது ரசாபாசமாகத் தென்பட்டால் அந்த நிமிடமே சாமான்களை வெளியில் வாரிப் போட்டு விரட்டி விடுவது என்றும் நிச்சயித்துக் கொண்டாள்.

வழக்கம் போல் ஒரு நாள் விளக்கேற்றும் நேரத்தில் சந்திரன் ஸ்கூட்டரில் வந்தான். சமையலறையில் வேலையாயிருந்த கண்ணம்மா அவன் வந்ததைக் கவனிக்கவில்லை. ஆனால் சுந்தரி பார்த்து விட்டு ஓடிவந்து தன் தாயாரிடம் ரகசியமாகத் தெரிவித்தாள். அப்போது சிவப்பிரகாசம் வீட்டில் இல்லை; வெளியில் எங்கோ போயிருந்தார்.

கண்ணம்மாவுக்கு ஆத்திரம் பொங்கியது. செய்து கொண்டிருந்த வேலையை அப்படியே போட்டு விட்டுச் சந்தடியின்றி மாடியேறிப் போய்த் திடுமென்று அறைக்குள் புகுந்தாள்.

என்ன ஆச்சரியம்! அங்கே சந்திரனைக் காணோம். தேவகி சமையல் காரியத்தில் மும்முரமாக ஈடுபட்டிருந்தாள். அவளின் தாயார் பூஜையறையில் அமர்ந்து ஜபமாலை உருட்டிக் கொண்டிருந்தாள்.

சந்திரன் எங்கே? கண்ணம்மா வந்ததைப் பார்த்துவிட்டு எங்காவது போய் மறைந்து கொண்டானோ? அல்லது தேவகியே அவனை மறைத்து வைத்து விட்டாளா?

ஒன்றுமறியாதவள் போல் குசலம் விசாரித்துக் கொண்டு அங்குமிங்குமாக நடமாடினாள் கண்ணம்மா. அவளுடைய கண்களோ சந்திரனைத் தேடி அலைந்தன.

என்றுமில்லாத அதிசயமாக வீட்டுக்கார அம்மாள் வந்ததைக் கண்ட தேவகி மகிழ்ச்சியுடன் வந்து அவளை வரவேற்றாள். சந்திரன் அங்கே இல்லை என்பது கண்ணம்மாவுக்கு நிச்சயமாகத் தெரிந்து போயிற்று. அவன் எங்கே போயிருப்பான்? அந்த மாடிக்கு ஒரு படிக்கட்டுத்தான் இருக்கிறது. கீழே இறங்க வேறு வழி இல்லை. ஒருகால் வீட்டின் வாசல் வரை வந்தவன் எப்படியோ குறிப்பறிந்து கொண்டு அப்படியே திரும்பிப் போய் விட்டிருப்பானோ?

தான் மாடிக்கு வந்த காரணத்தை ஊகித்து விடாமலிருக்கத் தேவகியிடம் உப்புச் சப்பில்லாமல் கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டுச் சாவகாசமாகக் கீழே இறங்கி வந்தாள் கண்ணம்மா.

வாசலில் சந்திரனின் ஸ்கூட்டர் இல்லை. அவன் வீட்டுக்குள் வராமலேயே அப்படியே திரும்பிப் போய்விட்டான் போலும்!

கண்ணம்மாவுக்கு இது பெரிய தோல்விதான். ஆனாலும் தன் மனத்தில் வளர்த்துக் கொண்ட வெறுப்பையும் சந்தேகத்தையும் அவள் அகற்றி விடவில்லை. சமயத்தை எதிர் பார்த்துக் கொண்டுதான் இருந்தாள்.

ஏனோ சந்திரனின் வருகை மட்டுப்பட்டது. முன்போல் அவன் அடிக்கடி வருவதில்லை. அப்படி வந்தாலும் மாடியில் சிரிப்போ, பாட்டோ, பேச்சுக் கும்மாளமோ கேட்பதில்லை. வந்த சுருக்கிலேயே திரும்பிப் போய்விடுவான்.

## கைரேகை ஓவியர்

இத்தாலியின் புகழ் வாய்ந்த ஓவியரான சல்வடோர் ப்ளூம் என்பவர் தாம் வரையும் ஓவியங்களின் கீழ் தம் பெயரை எழுதுவதில்லை. பதிலுக்கு இடது கை கட்டை விரல் ரேகையைப் பதித்து விடுகிறார். காரணம் — அப்போதுதான் யாரும் அவர் வரைந்த ஓவியம் என்று சொல்லிப் போலி ஓவியங்களை விற்க முடியாது. பொய்க் கையெழுத்துப் போடுவது போல் ரேகையைக் காப்பியடிக்க முடியாதே !

**ஆதாரம்: மிலான் நியூஸ்** **தகவல்: விஜயா**

---

ஒரு மாசத்துக்குப்பின் ஒரு நாள் மாலை மாடியில் தேவகி சண்டை போடுவதுபோல் இரைந்து பேசும் குரல் கேட்டது. அப்போது சந்திரன் மேலேதான் இருந்தான். சிறிது பொழுது கழித்து அவன் வருத்தத்துடன் தலை குனிந்து கீழே இறங்கிப் போனதைக் கண்டாள் கண்ணம்மா. 'காதலர்களுக்குள் ஊடல் நடக்கிறதாக்கும்' என்று எண்ணிக் கறுவிக் கொண்டாள். ஆனால் சந்திரன் அன்றிலிருந்து இந்தப் பக்கமே தலைகாட்டாமல் இருந்து விட்டான்.

கண்ணம்மாவுக்கு இப்போது அதிலெல்லாம் அவ்வளவு கவனம் இல்லை. வேறொரு கவலையில் அவள் ஆழ்ந்திருந்தாள். தன் அன்பு மகள் சுந்தரி பற்றிய கவலை அது.

சுந்தரிக்குக் கொஞ்ச நாட்களாக உடம்பு சரியில்லை. என்ன நோய் என்றும் தெரியவில்லை. முன்போல் அவள் உற்சாகமாக ஓடியாடிச் சமையல் காரியங்களில் ஈடுபடுவதுமில்லை. எப்போதும் சோர்ந்து துவண்டு படுத்தே கிடந்தாள். சில சமயம் காலை வேளைகளில் குமட்டிக் குமட்டி வாந்தியும் எடுத்தாள். எல்லாம் கடந்த ஒரு வாரமாகத்தான் இந்த நிலை.

என்ன செய்வதென்று தெரியாமல் தவித்துக் கொண்டிருந்த கண்ணம்மாவிடம் ஒரு நாள் திடீரென்று தேவகி வந்து, ''நான் நாளைக்கு வீட்டைக் காலி பண்ணிவிட்டுப் போகிறேன்'' என்றாள்.

ஏன், எதற்கு என்றெல்லாம் கண்ணம்மா கேட்கவில்லை. 'குட்டு வெளிப்படுமுன் இங்கிருந்து ஓடிவிடுகிறாள் போலும்! அநாசாரம் ஒழிந்தால் சரி!' என்று எண்ணி உடனே தலையை ஆட்டி விட்டாள். தேவகியும் சொன்னபடி மறு நாள் வீட்டைக் காலி பண்ணிக்கொண்டு போய் விட்டாள்.

அவள் போன இரண்டாம் நாள் கண்ணம்மாவின் பெயருக்கு ஒரு கடிதம் வந்தது. தேவகிதான் அதை எழுதியிருந்தாள். சிவப்பிரகாசம் அப்போது வீட்டில் இருந்ததால் கடிதத்தை வாங்கி, மனைவியையும் பக்கத்தில் வைத்துக் கொண்டு படித்தார்.

அன்பும் பணிவுமாக க்ஷேமலாபங்களை விசாரித்துவிட்டுத் தேவகி இப்படிக் கடிதத்தைத் தொடர்ந்திருந்தாள்:

''உங்கள் வீட்டில் குடிவந்த நாள் முதல் என் மீது உங்களுக்கு நல்ல அபிப்பிராயம் இல்லை என்பதை நான் அறிவேன். பிறகு சந்திரன் என்ற எங்கள் குடும்ப நண்பர் என்னைப் பார்க்க வரத் தொடங்கியதிலிருந்து நான் நடத்தை கெட்டவள் என்றே நீங்கள் தீர்மானித்து விட்டீர்கள் என்பதையும் அறிவேன். எனக்குக் கொஞ்சம் உலக அநுபவம் உண்டு. அதைக் கொண்டு உங்களைப் போன்றவர்களைச் சமாளிக்க என்னால் முடியும் என்ற நம்பிக்கையும் உண்டு. ஆகவே, அது பற்றி நான் கவலைப்படவில்லை. இப்போது உண்மையில் கவலைப்பட்டு இக் கடிதம் எழுதுவதன் காரணத்துக்கு இனி வருகிறேன்.

''வெளியூரில் வேலை பார்க்கும் என் அண்ணாவுக்கும், இங்கே இருக்கும் எங்களுக்கும் ஒரு நேரிடைத் தொடர்பாகச் சந்திரன் உதவி வந்தார். இது எப்படி என்று கேட்கலாம். என் அண்ணா ஒரு ரயில்வே ஸ்டேஷனில் டி. சி.யாக வேலை பார்ப்பவர். இதனால் இவ்விருவரும் அடிக்கடி சந்திக்க வாய்ப்பு இருக்கிறது. ஆகவே, சந்திரன் மூலம் என் அண்ணாவும், நானும் க்ஷேமலாபச் செய்திகளை அனுப்பியும், பணம் பண்டங்களைப் பெற்றும் வந்தோம். இம் மாதிரி உதவிகள் புரியவே சந்திரன் என்னைப் பார்க்க வந்து கொண்டிருந்தார். இந்த வரவுபோக்கில் எப்படியோ ஓர் அதிசயம் நிகழ்ந்து விட்டது! ஆமாம்; சந்திரனும் உங்கள் அருமை மகள் சுந்தரியும் காதலர்களாகி விட்டார்கள் !

''எனக்கு இது ரொம்ப நாட்கள் வரை தெரியாது. சந்திரனே ஒரு நாள் தயங்கித் தயங்கி என்னிடம் சொன்னார். நான் அதைக் கேட்டுக் கவலைப்படவில்லை. மகிழ்ச்சியே கொண்டேன். அவர்களின் காதல் வளர மறைமுகமாக உதவியும் செய்தேன். ஆனால் அவர்கள் வெறும் காதலோடு நில்லாமல் அதன் வரம்பையும் கடந்து விட்டார்கள் என்பதைச் சந்திரன் வாயிலாகக் கேள்விப்பட்டு அதிர்ச்சி அடைந்தேன்; கோபமும் கொண்டேன். எனினும், இதற்கு முன்பே காரியம் மிஞ்சிப் போயிற்று. அதாவது, உங்கள் மகள் சுந்தரி இப்போது இரண்டு மாதம் முழுகாமல் இருக்கிறாள்.

''கவலைப்படாதீர்கள்! சந்திரன் அப்படி ஒன்றும் அடாவடிப் பேர்வழி அல்ல. உங்கள் மகளை அவர் மணந்து கொள்ளத் தயாராக இருக்கிறார். ஆனால் நேரில் உங்களைப் பார்த்துக் கேட்கப் பயப்படுகிறார். எனவே, நீங்கள் விஷயத்தை வெளியில் விடாமல், சாதாரணமாக அவர் வீட்டாரிடம் போய் வரன் கேளுங்கள். ஒப்புக் கொள்வார்கள். உடனே கல்யாணத்தை முடித்துவைத்து விடுங்கள். இப்போது நான் சந்திரனிடம் பேசுவதில்லை. ஆனாலும் உங்கள் மகளின் கல்யாணத்துக்குத் தவறாமல் வருவேன். மறவாமல் எனக்குத் திருமண அழைப்பிதழ் அனுப்பி வையுங்கள்.''

தலையில் கை வைத்துக் கொண்டு கவலையில் அப்படியே சாய்ந்து கிடந்தாள் கண்ணம்மா. கடிதத்தைப் படித்து முடித்த சிவப்பிரகாசம் அமைதியே வடிவாக எழுந்து துண்டை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டு சந்திரனின் பெற்றோரைப் பார்க்கப் புறப்பட்டார்.

# வாங்குங்கள் இந்த மர்பி

## டிரான்ஸிஸ்டர்களில் எதாவதொன்றை...



**மர்பி மாடல் டிபி 0816**

ஆல்-வேவ் * 3 பாண்டுகள் * 9 டிரான்ஸிஸ்டர்கள் மற்றும் டயோடு.

**விலை: ரூ. 415.00***



**மர்பி மினி-மாஸ்டர் மாடல் டிபி 0581**

9 டிரான்ஸிஸ்டர்களும் டயோடுகளும் * 2-பாண்டுகள் (நிலையங்களைப் பெறுவதில் 3-பாண்டுகளுக்குச் சமமானது) * உட்பொருத்தப்பட்ட ஏரியல்-மீடியம் மற்றும் சிற்றலை ரிஸப்ஷனுக்கு.

**விலை: ரூ. 303.00***



**மர்பி மிக், மாடல் டிபி 0579**

2 பாண்டுகள் * 8 டிரான்ஸிஸ்டர்கள் மற்றும் டயோடு. உட்பொருத்தப்பட்ட ஏரியல் * நுட்பமான திருப்பத்திற்கு 'எபிஸைக்ளிக் ரிடக்ஷன் கியரிங்'!

**விலை: ரூ. 240.00***



**மர்பி மூஸிஷியன், மாடல் டிபி 0509**

5 டிரான்ஸிஸ்டர்கள் மற்றும் டயோடுகள் * மீடியம் அலை ஒரு பாண்டு. * உட்பொருத்தப்பட்ட ஏரியல்.

**விலை: ரூ. 125.00***

எக்ஸைஸ வரி இல்லை.

* **அகில இந்திய விலை:** (மகாராஷ்டிரம் தவிர) எக்ஸைஸ் வரி மட்டுமே உள்ளிட்டது. பாட்டரியின் விலை தனி. விற்பனை வரி மற்றும் இதர ஸ்தல வரிகள் தனி.



# murphy radio

**மர்பி ரேடியோ** இல்லத்தை மகிழ்விக்கிறது!

*Murphy sets the standard*

# கல்லுக்குள் ஈரம்

## ர. சு. நல்லபெருமாள்

### அத்தியாயம் 45

### சதிக்கு ஒரு சதி!

முத்து. ''இங்கே யாருமில்லையே, சோடா வாங்கி வர....'' என்று தயங்கியபடி கூறினான். அவன் சொல்லி முடிப்பதற்குள் திரிவேணி மயக்க முற்றவளைப் போல் நாற்காலியிலேயே சரிந்து விட்டாள். முத்து செய்வதறியாது திகைத்தான். பிறகு பக்கத்து அறைக்குள் ஓடி ஒரு குவளையில் தண்ணீர் கொண்டு வந்து அவள் முகத்தில் தெளித்தான். திரிவேணி, கண்களை விழித்துப் பார்த்தாள். மெதுவாகத் தலையைத் தூக்கி, ''சோடா வேண்டும்'' என்றாள். பிறகு மீண்டும் தலையைக் கீழே சாய்த்துக் கண்களை மூடிப் படுத்து விட்டாள். முத்து பரபரப்புடன் வெளியே வந்து அச்சகத்துக் கதவை இழுத்துச் சாத்திவிட்டுச் சோடா வாங்கி வரத் திரிவேணியின் சைக்கிளில் கடைக்கு விரைந்தான்.

திரிவேணி தலையைத் தூக்கிப் பார்த்தாள். வாசற் கதவு அடைத்திருந்தது. எழுந்து சன்னல் வழியாகப் பார்த்தாள். சைக்கிளில் முத்து விரைந்து சென்று கொண்டிருந்தது தெரிந்தது. ஞாயிற்றுக்கிழமையாதலால், அந்தப் பகுதியிலிருந்த கடைகள் மூடியிருந்தன. ஜங்ஷன் போய்த்தான் சோடா வாங்கி வர வேண்டும். முத்து திரும்பி வர எப்படியும் பத்து நிமிஷங்களாவது ஆகும். திரிவேணி விரைந்து வாசற் கதவை உள் பக்கம் தாளிட்டு விட்டுச் சர்தாரின் அறைக்குள் நுழைந்தாள்.

மேஜையைத் திறந்தபோது, உள்ளே வெறும் காகிதங்களும், சுயேச்சைப் பத்திரிகையின் பிரதிகளும் கிடந்தன. அவைகளை ஒதுக்கிவிட்டு, உள்ளே துழாவினாள். ஒன்றும் எதிர்பார்த்தது அகப்படவில்லை. மேஜைக்குக் கீழே வலது புறத்தில் அடுக்காக ஒன்றுக்குக் கீழே ஒன்றாக அமைந்திருந்த டிராயர்களைத் திறந்தாள். முதல் இரண்டு டிராயர்களுக்குள் ஒன்றும் அகப்படவில்லை. மூன்றாவது டிராயரைத் திறந்ததும் உள்ளே தள்ளி ஒரு காகிதம் சுருட்டி வைக்கப்பட்டிருந்தது தெரிந்தது. அதைப் பரபரப்புடன் எடுத்தபோது அதற்கு அடியிலிருந்த கைத்துப்பாக்கி அவள் கையில் இடித்தது. தீயைத் தீண்டியது போல் கையைப், பதற்றத்துடன் உதறினாள். அருவருப்பால் அவள் முகம் சுளித்தது. கையிலிருந்த காகிதச் சுருளைப் பரபரப்புடன் மேஜையின் மீது வைத்து விரித்தாள்.

அவள் எதிர்பார்த்து வந்தது கிடைத்து விட்டது. அந்தப் பரபரப்பில் அவள் நெஞ்சு படபடத்தது. மூச்சு வாங்கியது. காகிதத்தில் வரையப்பட்டிருந்த படத்தைக் கவனமாகப் பார்த்தாள்.

சேர்மாதேவிப் பாலத்தின் படமும் அதில் உள்ள மூன்றாவது கண்வாயில் இரண்டு வெடி. குண்டுகள் பொருத்தப்பட்டிருப்பதும், அதை வெடிக்க வைக்கும் மின்சாரத்துடன் தொடர்புள்ள வயர்கள் செல்லும் பாதையும் அந்தப் படத்தில் தெளிவாகத் தெரிந்தன. பாலத்தைச் சுற்றியுள்ள வட்டாரத்தைப் பற்றிய விவரங்களும், வெடி வைப்பவர்கள் ஒளிந்திருக்கும் இடங்களும் அதில் தெளிவாகக் குறிக்கப்

பட்டிருந்தன. அந்தப் படத்தோடு குண்டூசியால் இணைக்கப்பட்டிருந்த மற்றொரு காகிதத்தைப் பார்த்தபோது பேரதிர்ச்சிக்கு உள்ளானாள். உள்ளம் நடுங்க அதை மாறி மாறிப் பார்த்தாள்.

திங்கட் கிழமை இரவு பத்தேகால் மணிக்கு அந்தப் பாலத்தின் மீது ரயில் வண்டி வரப்போகும் விவரமும், அந்த வண்டியில் அறுநூற்று எண்பது வெள்ளைக்காரச் சிப்பாய்கள் பிரயாணம் செய்கிறார்கள் என்ற விவரமும் அதில் குறிக்கப் பட்டிருந்தன.

திரிவேணியின் மனம் பதறியது. உடல் நடுங்கியது. படத்தையும், குறிப்புக்களையும் திரும்பத் திரும்பப் பார்த்து மனத்தில் பதிய வைத்துக் கொண்டாள். பிறகு அவைகளை முன்போல் சுருட்டி டிராயருக்குள் தள்ளி டிராயரைச் சாத்தினாள். வாசலுக்கு விரைந்து வந்து வாசற் கதவுத் தாழைத் திறந்து விட்டு நாற்காலியில் போய் மயங்கிக் கிடப்பவளைப் போல் சாய்ந்து படுத்துக் கொண்டாள்.

சிறிது நேரத்தில் முத்து பரபரப்புடன் சோடா பாட்டிலோடு உள்ளே நுழைந்தான். திரிவேணி எழுந்திருக்கவில்லை. கொஞ்சம் தண்ணீரை அள்ளி அவள் முகத்தில் தெளித்தான். கண்களை மெள்ளத் திறந்தாள், திரிவேணி. பிறகு முத்துவிடமிருந்து சோடாவை வாங்கிக் குடித்தாள். மயக்கம் தெளிந்து விட்டவளைப் போல் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டாள்.

''உங்களுக்குச் சிரமம் கொடுத்துவிட்டேன். ஏதோ அசதி. அதனால்தான் மயக்கம் வந்து விட்டது.... நான் வரட்டுமா?'' என்று கூறிக் கொண்டே எழுந்தாள்.

''கொஞ்சம் இளைப்பாறி விட்டுப் போங்களேன்'' என்றான் முத்து.

''உடம்பு சரியாகி விட்டது'' என்று சொல்லிக் கொண்டே வாசலுக்கு வந்து விட்டாள்.

''சர்தாரிடம் ஏதாவது சொல்ல வேண்டுமா?'' என்று கேட்டான் முத்து.

''வேண்டாம். இந்தப் பக்கமாக ஒரு வேலையாக வந்தேன். அப்படியே அப்பாவைச் சாப்பிட அழைத்துக் கொண்டு போகலாம் என்று வந்தேன். வேறு விசேஷம் ஒன்றும் இல்லை''

திரிவேணி, சைக்கிளில் ஏறி ஜங்ஷனை நோக்கி விரைந்தாள். அவள் மனம் குழம்பி யிருந்தது. மறுநாள் இரவு நடக்கவிருக்கும் பயங்கரச் செயலை நினைக்க நினைக்க உடல் பதறியது. அந்தச் சதியை எப்படியும் முறியடித்தேயாகவேண்டும் என்ற வேகம் எழுந்தது.

எப்படித் தடுப்பது?

சர்தார் தலைமையில் உருவாகிய அந்தச் சதியை அவளால் எப்படித் தடுக்க முடியும்? அவள் எவ்வளவுதான் கெஞ்சினாலும், சர்தாரோ அல்லது அவரைச் சேர்ந்தவர்களோ சதியைக் கைவிடப் போவதில்லை.

எப்படியும் அதைத் தடுத்தேயாக வேண்டும்.... உயிரைப் பணயம் வைத்தாவது அந்த நாச வேலையை நிறுத்தியே தீர வேண்டும்...

திரிவேணி, சைக்கிளைப் போலீஸ் நிலையத்தை நோக்கிச் செலுத்தினாள்.

போலீஸிடம் விவரத்தைச் சொல்லி விட்டால் சதி வெற்றி பெறாது. ஆனால் சதியில் ஈடுபட்டிருக்கும் அப்பாவும் ரங்கமணியும்... செய்த கர்மத்தின் பலனை அனுபவிக்க வேண்டியதுதானே தர்மம். மகாத்மா காந்தி இந்த இடத்தில் இருந்தால் சதிகாரர்களைப் போலீஸிடம் தான் ஒப்படைப்பார்.... அப்பாவும், ரங்கமணியும் தண்டனை யடைவதை நான் பார்க்கவா? ஐயோ....!

திரிவேணி மனம் குழம்பினாள். சைக்கிளின் வேகம் குறைந்தது. அவளுக்கு உண்மையிலேயே மயக்கம் வருவது போலிருந்தது. போலீஸ் நிலையத்தைச் சைக்கிள் நெருங்கியது. ஒரு கணம் திகைத்தபடி போலீஸ் நிலையத்தின் வாசலில் சைக்கிளில் அமர்ந்தவாறே காலைத் தரையில் ஊன்றியபடி சரிந்து நின்றான். சைக்கிளை விட்டு இறங்கி உள்ளே போகவா வேண்டாமா என்ற பிரச்னையில் திணறிக் கொண்டிருந்தாள். ஒரு முடிவுக்கும் வர இயலவில்லை. பக்கத்திலிருந்த தபால் நிலையம் பார்வையில் பட்டதும் திடீரென்று ஒரு யோசனை தோன்றியது. உடனே சைக்கிளில் தபால் நிலையத்துக்கு விரைந்தாள்.

உடனே புறப்பட்டு வருமாறு தீக்ஷிதருக்குத் தந்தியைக் கொடுத்துவிட்டு வீடு வந்து சேர்ந்தாள்.

தீக்ஷிதர் வந்து சேரும்வரை திரிவேணி அமைதியின்றித் தவித்தாள். இரவு எட்டு மணிக்குத் தீக்ஷிதர் வந்து சேர்ந்தார். சதியின் விவரம் அறிந்து பதறினார். அவருடைய மெல்லிய உடல் நடுங்கியது.

''சொக்கலிங்கம் ஒரு காரியத்தில் இறங்கினால் தீவிரமாகி விடுவானே. பாரதமாதா சங்கமே அல்லவா இந்தச் சதியை உருவாக்கி யிருக்கிறது. நம்முடைய சக்திக்கு மீறிப் போய்விட்டது திரிவேணி. நம்மால் இதைத் தடுக்கவே முடியாது'' என்றார் மிகுந்த துக்கத்துடன்.

'' இது போலீஸுக்கே தெரியக் கூடாது.... எனக்கு ஒன்று தோன்று

கிறது'' என்றாள் திரிவேணி. ஆவலுடன் அவளையே பார்த்தார் தீக்ஷிதர்.

''நாமே சேர்மாதேவிக்குப் போய்ச் சதியை நிறைவேற்ற விடாமல் தடுத்தால்....''

''அதெப்படி முடியும்? சொக்கலிங்கமும், அவன் கூட்டத்தாரும் நாம் சொல்வதைக் கேட்டால்தானே? நம்மைக் கண்டால் நம்மையே எங்காவது ஓர் அறையில் அடைத்துப் பூட்டி விட்டுத் தங்கள் சதியை நிறைவேற்றி விடுவார்கள். இது ஒரு மனிதனின் செயல் இல்லையே. ஒரு கூட்டமே திட்டமிட்டு நடத்தும் சதியாயிற்றே..'' என்றார் தீக்ஷிதர்.

''சதியின் விவரம் முழுவதும் எனக்குத் தெரியும். பாலத்தில் எந்த இடத்தில் வெடிகுண்டு வைக்கப்படும் என்பதும் தெரியும். இரவில் இரகசியமாக வெடிகுண்டைக் குலைத்துவிட்டால்...?''

''அம்மா, திரிவேணி! இது பயங்கரமான விஷயம். ஆபத்தானது'' என்று பதறினார் தீக்ஷிதர்.

''தைரியமா யிருங்கள். எனக்குத் துணையாக மட்டும் வாருங்கள் போதும். நான் காரியத்தை முடித்து விடுவேன். கொஞ்சம் தாமதித்தாலும் மோசம் வந்துவிடும்; ஆறு நூறு உயிர்களுக்கு





ரொம்பப்
பெரிதும் அல்ல
ரொம்பச்
சிறிதும் அல்ல



# 1½ டன் எடை சாமான் ஏற்றும் பார்கோ D-300

*சிறிய வண்டிகளிலே பெரிது; பெரிய வண்டிகளின் உழைப்பு. சுருங்கச் சொன்னால் நடுத்தரமான நல்ல வண்டி பார்கோ D-300. அதிகச் சாமான்களை ஏற்றிச் செல்ல அடக்கமான வண்டி பார்கோ D-300. சாலைகளிலே சங்கடமில்லாமல் ஓட்டவும், போக்குவரத்து நெரிசலைச் சுலபமாகச் சமாளிக்கவும் பொருத்தமான வண்டி பார்கோ D-300. பிக்-அப்-வான் டெலிவரி வான், ஸ்டேஷன் வாகன், ஆம்புலன்ஸ் ஆகிய எந்த விதத்திலும் உபயோகிக்கலாம். நகரத்திலும் அதன் சுற்றுப்புறங்களிலும் ஆட்களையும் சாமான்களையும் குறைந்த செலவில் ஏற்றிச் செல்ல, இணையற்ற வண்டி பார்கோ D-300.*

***சக்தி மிக்க 28.35 H.P. பெட்ரோல் என்ஜின் • 3,112 மி.மீ. (123") WB அல்லது 3,366 மி.மீ. (133") WB ஆகிய இரண்டில் விருப்பமானதைத் தேர்ந்தெடுக்கலாம் • சுலபமாகவும் விரைவிலும் ரிப்பேர் செய்ய பானெட் திறப்பு வசதி.***

* (பிரிமியர் ஆட்டோமோபைல்ஸ் தயாரிப்பு)

**தவணை ஏற்பாடு:**

**சுந்தரம் பைனான்ஸ் லிமிடெட்**

மூலம் சுலபமான மாதத் தவணைகளில் வாங்கலாம்



முழு விவரங்களுக்கு
அன்பு கூர்ந்து அணுகுக:

**டி. வி. சுந்தரம் அய்யங்கார் & சன்ஸ் பிரைவேட் லிமிடெட்,**
மதுரை - திருச்சி - திருநெல்வேலி - புதுக்கோட்டை - சேலம் - கோயமுத்தூர் - திருவனந்தபுரம்

**சுந்தரம் மோட்டார்ஸ் பிரைவேட் லிமிடெட்** மதராஸ் - பங்களூர் - செகந்திராபாத் (A.P.)




42720

மேல் பலியாகி விடும்'' என்றாள் திரிவேணி.

தீக்ஷிதர் தயங்கினார். திரிவேணியால் அவ்வளவு பெரிய காரியத்தைச் சாதிக்க இயலுமா என்று மலைத்தார். அந்தப் பணியில் அடங்கியிருந்த ஆபத்தையும் உணர்ந்து மனம் சோர்ந்தார்.

''நமக்குத் தெரிந்த பிறகும் இந்தச் சதியை உடைக்கவில்லை என்று மகாத்மாவுக்குத் தெரிந்தால் அவர் மனம் என்ன பாடுபடும். நம்மைப் பற்றித்தான் எவ்வளவு இழிவாக எண்ணி விடுவார்... கோழைத்தனத்தால் நூற்றுக் கணக்கானவர்களைச் சாகும்படி விட்டோம் என்ற பழி நமக்கு வந்து விடும். நம்முடைய முகத்தில் விழிக்க மகாத்மா மறுத்துவிடுவார்'' என்றாள் திரிவேணி ஆவேசத்துடன்.

கடைசியில் தீட்சிதர் சம்மதித்து விட்டார். மறு நாள் மாலை ஆறு மணிக்குச் சேர்மாதேவிக்குப் புறப்படுவதென்று முடிவு செய்தார்கள்.

மறு நாள் மாலை ஆறு மணிக்குச் சிவானந்தத்தின் பங்களாவில் அவனும் கமலவாசகியும் மாடி வராந்தாவில் உட்கார்ந்திருந்தார்கள். சிவானந்தம் மிகுந்த மனக் குழப்பத்தில் சிக்கியிருந்தான். திருநெல்வேலியைச் சுற்றிலும் நிகழ்ந்து கொண்டிருந்த கலவரங்களும் நாச வேலைகளும் பற்றிய செய்திகள் வந்தவண்ணம் இருந்தன. இந்தக் கவலைகளால் சிவானந்தம் நல்ல தூக்கம் கூட இல்லாமல் தவித்தான்.

''ஆற்று மணலில் திரிவேணி பேசிய போதே அவளைக் கைது செய்திருக்க வேண்டும். அவளுடைய தூண்டுதலினால்தான் இந்த நாச வேலைகள் நடக்கின்றன'' என்றாள் கமலவாசகி மிகுந்த எரிச்சலுடன்.

''உனக்கு அவளைக் கண்டால் எரிச்சல். அவளைப் பற்றி ஏதாவது சொல்லிக் கொண்டிருக்க வேண்டும். மக்களை அமைதியாக இருக்கும்படி வேண்டி அறிக்கை விட்டு விட்டாளே!''

''இதெல்லாம் ஒரு நாடகந்தான். உண்மையில் அவளுக்கும் இந்தக் கலவரங்களிலும், நாச வேலைகளிலும் பங்கு இருக்கும். இப்படி ஒவ்வொருவரையும் நீங்கள் நம்பித்தான் ஏமாளியாகிறீர்கள். குலசேகரப் பட்டணத்தில் கலவரம் தோன்றிக் கொலையும், தீ வைப்பும் நடந்ததே, உங்களால் தடுக்க முடிந்ததா? நான் சொன்னபோதே கடுமையான நடவடிக்கை எடுத்திருந்தால், குலசேகரப் பட்டணத்துச் சம்பவம் நடந்திருக்குமா?''

''சுதந்திர வெறி கொண்டு மக்கள் பொங்கி எழுந்தால் நம்மால் என்ன செய்ய முடியும்? பித்துக்குளி மாதிரி திரிந்து கொண்டிருந்த வெங்குகூட நாட்டுக்காக உயிரை விட்டுத் தியாகி யாகி விட்டானே! சாது மிரண்டால் காடு கொள்ளாது. மக்கள் கொதித்தெழுந்தால் போலீஸெல்லாம் எம்மாத்திரம்? தெய்வம்கூடப் பணிந்துவிட வேண்டியதுதான்.''

''போலீஸ் அதிகாரி பேசும் பேச்சா இது? உங்களையெல்லாம் நம்பி வெள்ளைக்காரன் ஆள்கிறானே. கதர்ச் சட்டைக்காரர்களைக் கண்ட இடத்திலேயே அடித்து நொறுக்கியிருந்தால் இந்த வம்பெல்லாம் வந்திருக்குமா?'' என்றாள் கமலவாசகி, வெறுப்புடன். சிவானந்தம் பதில் ஒன்றும் சொல்லாமல் இருந்தான்.

''நீங்கள் சர்தார் சொக்கலிங்கம் பிள்ளையை இன்னும் நம்பிக் கொண்டிருக்கிறீர்கள்'' என்றாள்.

''அருண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய். உனக்குத் திரிவேணியைப் பிடிக்காது. அதற்காக அவளைச் சேர்ந்தவர்களையெல்லாம் சந்தேகிக்கிறாய்'' என்றான் சிவானந்தம்.

பக்கத்து அறையில் ஃபோன் மணி அடித்தது. சிவானந்தம் விரைந்து சென்று ஃபோனை எடுத்தான்.

''ஹலோ....யாரது?''

''டெபுடி எஜமான் வீடுதானே.... அம்மா அங்கே இருக்கிறார்களா....?'' போனில் கேள்வி வந்தது.

''யார் பேசுவது?'' என்று சிவானந்தம் கேட்டான்.

''இங்கே சி. ஐ. டி. கிருஷ்ணன் பேசுகிறேன். அம்மாவிடம் பேசவேண்டும்.''

''டெபுடிதான் பேசுகிறேன். என்ன விஷயம்?''

போனில் சிறிது நேரம் பதில் இல்லை.

''என்ன விஷயம் சொல்லு!'' சிவானந்தம், மிகுந்த அதிகாரத்தோடு கேட்டான்.

''எஜமான்.... சுயேச்சைப் பத்திரிகை ஆபீஸைக் கண்காணிக்கும்படி அம்மா சொன்னார்கள்....''

''உம்.... அப்புறம்....?''

''அங்கே ஏதோ சதி நடக்கிறது.''

''என்ன...!''—அதிர்ச்சியுற்றவனாய்க் கேட்டான் சிவானந்தம்.

''ஆமாம், ஏதோ சதி செய்கிறார்கள்'' என்றார் கிருஷ்ணன்.

''ஏதாவது துப்புத் தெரிந்ததா?''

''ஆமாம். நேற்று இரவு பலர் அங்கு கூடினார்கள். இரவு எட்டு மணிக்

குப் பிறகு எல்லாரும் எங்கோ போய் விட்டார்கள். இப்போது அங்கே ஒரே ஓர் ஆசாமிதான் இருக்கிறான்.''

''சதி நடக்கிறது என்பதற்கு என்ன ஆதாரம் இருக்கிறது ?''

''நேற்று கதவிடுக்கு வழியாகக் கவனித்தேன். சொக்கலிங்கம்பிள்ளை, நாலைந்து கைத் துப்பாக்கிகளை எடுத்துக் கூட இருந்தவர்களிடம் கொடுத்தார். அந்தக் கூட்டத்தில் சி. ஐ. டி. வடிவேலுவும் இருந்தான்....''

''இதை நேற்றே ஏன் தெரிவிக்கவில்லை ?'' என்று கோபமாக இரைந்தான் சிவானந்தம்.

''முழு விவரமும் தெரிந்தபிறகு சொல்லலாமென்றிருந்தேன், எஜமான்! இன்று முழுதும் யாரும் அச்சாபீசுக்கு வரவில்லை. வெளியில் அச்சாபீஸ் விடுமுறை என்று எழுதியிருக்கிறது. பக்கத்தில் இருக்கும் அரச மரத்தின் மேலிருந்துதான் கவனிக்கிறேன். சற்று முன்புதான் ஒருவன் அச்சாபீசுக்கு உள்ளிருந்து முன்பக்கத்து சன்னல் கதவைத் திறந்து வெளியே பார்த்து விட்டு மீண்டும் மூடி விட்டான். வெளிக் கதவில் ஒரு பெரிய பூட்டு தொங்குகிறது. வெளியிலிருந்து பார்ப்பவர்களுக்கு அச்சாபீஸ் பூட்டிக் கிடப்பது போல் தான் தோன்றும். ஆனால் ஓர் ஆசாமி உள்ளே இருக்கிறான். உடனே சோதனை இட்டால் துப்புக் கிடைக்கும்'' என்றார் சி. ஐ. டி. கிருஷ்ணன் பரபரப்புடன்.

''சரி, நீ அங்கேயே கண்காணித்துக் கொண்டிரு. அச்சாபீஸிலிருந்து அந்த ஆசாமி வெளியேறி விடாமல் பார்த்துக் கொள். ஐந்து நிமிஷங்களில் அங்கு வந்து விடுகிறேன்'' என்று கூறிவிட்டுப் போனைக் கீழே வைத்தான் சிவானந்தம்.

அவனுடைய முகத்தில் வியர்வை அரும்பியிருந்தது. பேரதிர்ச்சிக்குள்ளாகியிருந்தான் என்பதை விகாரமடைந்திருந்த முகமே காட்டி விட்டது.

சுயேச்சை அச்சகத்தில் சதியா....? நம்ப முடியவில்லையே! கமலவாசகியின் சந்தேகம் சரிதானா? யாரையும் நம்ப முடியவில்லையே !

சிவானந்தம் மனம் குழம்பித் தவித்தான். சிறிது நேரம் ஒன்றும் செய்யத் தோன்றாமல் போன் பக்கத்திலேயே நின்றான். பயங்கரக் கனவிலிருந்து விழித்தவனின் முகம் மாதிரி, அவன் முகம் விகாரம் அடைந்திருந்தது. கலங்கிய மனத்தோடு அந்த அறையை விட்டு வெளியே வந்த போது கமலவாசகி, வராந்தாவிலிருந்து எழுந்து வந்தாள்.

''என்ன ஃபோன் ? ஏதாவது கலவரமா?'' என்று கேட்டாள்.

### வீர ஜவான் !

சிப்பாய் ஒருவன் சொன்னான்: ''நான் காட்டு வழியாக நடந்து போனபோது திருடர்கள் என்னை வளைத்துக் கொண்டு என்னுடைய கைக் கடிகாரம், மோதிரம் எல்லாவற்றையும் பிடுங்கிக் கொண்டு விட்டார்கள்.''

''அப்படியா? உன்னிடம் கைத் துப்பாக்கி இருந்திருக்குமே!'' என்று அவன் நண்பன் விசாரித்தான்.

உடனே சிப்பாய் மீசையை முறுக்கிக்கொண்டு, ''நல்ல வேளை, அதை அவர்கள் பார்க்கவில்லை. பத்திரமாகக் கொண்டுவந்து விட்டேன்!'' என்றான். — ச. சத்தியமூர்த்தி

''யாரையும் நம்ப முடியவில்லையே!'' என்று முணுமுணுத்தான்.

''ஏன்....? என்ன விஷயம்?''

''சுயேச்சை அச்சகத்தில் சதி நடப்பதாகத் தகவல்.''

''ஆ....! யார் தகவல் கொடுத்தது?'' என்று பதற்றத்துடன் கேட்டாள் கமலவாசகி.

''கண்காணிக்க நீ அனுப்பியிருக்கிறாயே அந்தக் கிருஷ்ணன்தான்.''

''நான் நினைத்தது சரியாகி விட்டது. முன்பே சொன்னேன்; நீங்கள் நம்பவில்லை.... இப்போது எங்கே புறப்படுகிறீர்கள் ?''

''அச்சாபீசைச் சோதனை போட!'' என்று கூறிவிட்டு மாடியிலிருந்து கீழே இறங்கினான் சிவானந்தம்.

சுயேச்சை அச்சகத்தின் வாசலில் போலீஸ் வான் நின்றது. போலீஸ் காரர்கள் துப்பாக்கி சகிதம் இறங்கினார்கள். சிவானந்தமும் இறங்கினான். மரத்தின் பின்னால் ஒளிந்திருந்த கிருஷ்ணன் வேகமாக ஓடி வந்தார். போலீஸ் காரர்கள் அச்சகத்தைச் சூழ்ந்து நின்று கொண்டார்கள். கிருஷ்ணன் வாசல் கதவில் தொங்கிய பூட்டை இழுத்துப் பார்த்தார். பூட்டு திறக்கவில்லை.

''கதவை உடை'' என்று உத்தரவிட்டான் சிவானந்தம். போலீஸ் காரர்கள் பாறைக் கல்லினால் பூட்டை உடைக்க முனைந்தார்கள். அதே சமயம் வாசற் பக்கத்துச் சன்னல் கதவு இலேசாகத் திறந்து மூடப்பட்டது தெரிந்தது.

(தொடரும்)

## இடம் மாறிய காதுகள்

எல்லா ஜீவராசிகளுக்கும் காதுகள் உண்டு. ஆனால் அவை அமைக்கப்பட்டுள்ள இடமோ பூச்சிக்குப் பூச்சி மாறுபட்டிருக்கும்! வெட்டுக்கிளிக்கு அதன் முன்னங்கால்களில்தான் காதுகள் அமைந்துள்ளன. ஈக்களுக்கு அதன் தலையில் காதுகள் அமைந்துள்ளன! இந்தக் காதுகளைச் சுற்றி மெல்லிய ரோமங்கள் உள்ளன. இவை மிக மெல்லிய ஓசையின் விளைவாகக் கூட



அதிர்ந்து, நரம்பின் வழியே மூளைக்குச் செய்தியை அறிவிக்கின்றன!

பூச்சிகளுக்குக் காது கேட்பதோடு மட்டுமின்றி, அவை வண்ணங்களையும் பகுத்தறிகின்றன! உதாரணமாகத் தேனீ மனிதனை விடப் பார்வைச் சக்தி மிக்கது. இது சிவப்பைத் தவிர மற்ற எல்லா வண்ணங்களையும் இனம் கண்டுகொள்ளும்!

ஆதாரம்: "ஸ்புட்னிக்"

தகவல்: வி. சம்பத்குமார்

## ஆயிரம் மைல் பார்வை

பத்திரிகைகளிலும், புத்தகங்களிலும் உள்ள அட்சரங்களைப் படிக்கும் போது நம் கண்கள் இடமிருந்து வலம் சஞ்சரிக்கின்றன. சாதாரணமாக ஒரு மனிதனின் ஆயுளில் இம்மாதிரி 1000 மைல்வரை கண்கள் சஞ்சரிப்பதாகக் கண்டுபிடித்துள்ளார்கள்.

ஆதாரம்: 'ஸயன்ஸ் டைஜஸ்ட்'

தகவல்: 'ரமன்'



## பஞ்சவைப் பக்கம் 1

### அசுர வேக விமானம்

சிறிய அளவில் மாதிரி விமானங்களைத் தயாரிப்பதில் மேற்கு ஜெர்மானியர்களுக்கு மோகம் அதிகம். இரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறை குட்டி விமானங்கள் தயாரிப்பில் போட்டியும் நடத்தப்படுகிறது. படத்தில் காணப்படும் விமானத்தின் எடை ஆறரை ராத்தல்தான். சிறிய எஞ்சின் அதனுள் பொருத்தப்பட்டிருக்கிறது. இவ்விமானம் மணிக்கு 180 கிலோ மீட்டர் வேகத்தில் பறந்தது. 1969ல் மாடல் விமானங்கள் செய்வதில் உலக சாம்பியன் போட்டி நடக்கப் போகிறது. இதில் 20 நாடுகளைச் சேர்ந்தவர்கள் கலந்துகொள்வார்களாம். (யூ. பி. எஸ்.)



## நிலா! நிலா! ஓடி வா!

ஒரே ஒரு நிலாவைத்தான் நாம் பார்த்துக்கொண்டிருக்கிறோம். ஆனால் நிலவிலே மொத்தம் 29 உள்ளன என்றால் உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கும்.

| | |
|---|---|
| பூமிக்கு | 1 நிலவு |
| செவ்வாய்க்கு | 2 நிலவு |
| வியாழன் | 12 நிலவு |
| சனி | 9 நிலவு |
| யுரேனஸ் | 4 நிலவு |
| நெப்டியூன் | 1 நிலவு |

ஆக மொத்தம் 29 நிலவுகள் உள்ளன.

- குத்தாலம் வி. சம்பந்தன்

**பல்சுவைப் பக்கம்-2**



ஜெர்மனியில் காக்கா வலிப்பு நோயாளிகளுக்கான ஒரு பெரிய நிலையம், பெத்தல் நகரில் இருக்கிறது. இந்த ஆண்டு இந்நிலையம் நூறாவது ஆண்டு விழாவைக் கொண்டாடுகிறது. ஏழாயிரம் பேர் இதில் வாழ்கிறார்கள். தனி தபால் நிலையம், போலீஸ் நிலையம், கடைகள் ஆகியவை இதற்குள் இருக்கின்றன. சாதாரண சூழ்நிலையில் வேலை செய்ய முடியாதவர்களாக இவர்கள் இருந்தாலும், கவலை தெரியாமல் வேலை செய்ய எல்லாவித ஏற்பாடுகளும் செய்யப்பட்டிருக்கின்றன. இந்நகரமே 'சிக்காளி நகரம்' என்று அழைக்கப்படுகிறது.




## மனித குலம் மடிய நூறே ஆண்டா?

❁ அணுகுண்டு சோதனைகளால் உலகுக்கு ஏற்படுவதை விடப் பெரிய ஆபத்து வேறொரு விதத்தில் தினந்தோறும் நாமறியாமலே ஏற்பட்டு வருகிறது. ஆலைத் தொழில் பெருகப் பெருக நிலக்கரி, காஸ் அல்லது பெட்ரோலை எரிப்பதும் அதிகமாகிக் கொண்டுதானே வருகிறது? எரிப்புகளுக்கெல்லாம் வாயு தேவைப்படுகிறது. ஆலைப்படியால் வாயு மண்டலத்திலிருந்து ஏராளமான வாயு தினந்தோறும் எடுத்துக் கொள்ளப்படுகிறது. உலகுக்கு எவ்வளவு வேண்டுமானாலும் வாயு கிடைத்துக் கொண்டே இருக்கும் என்ற தப்பான கருத்தில் இவ்வாறு காற்றை உபயோகப்படுத்திக் கொள்கிறார்கள். ஆனால் உண்மை இது அல்ல. வானவெளிக் கப்பலில் செல்பவர்களுக்குக் காற்றுப் பையை அனுப்பி வைக்கும் நமக்கு அதிலிருந்து நிரந்தரமாகக் காற்றைப் பெற முடியாது என்பது தெரியும். ஆனால் நம் உலகத்தையே ஒரு வானவெளிக் கப்பலாக வைத்துப் பார்த்தால், இதற்கு இயற்கை அளித்துள்ள காற்றுப் பையும் இதே வேகத்தில் போனால் ஒரு நாள் தீர்ந்துவிட வேண்டியதுதான் என்பதை யாரும் உணரவில்லை. ஓரடி விட்டமுள்ள ஒரு கோளத்தின் மீது ஒரு காகிதத்தின் கனமுள்ள பசையை ஒட்டினால் எப்படியோ, அந்த அளவுக்குத்தான் இப்பூகோளத்தைக் காற்று மண்டலம் சூழ்ந்துள்ளதாம். நிலக்கரி, காஸ், பெட்ரோல் எரிப்புக்களில் காற்றை உபயோகப்படுத்திக் கொள்வதோடுமட்டுமின்றி, எரிப்பின் விளைவாக அதை மாசுபடுத்தவும் செய்கிறோம். 'இப்போது எல்லாம் சரியாகத் தோன்றும். ஆனால், சீனமும் இந்தியாவும், ஆப்பிரிக்காவும் மேற்கத்திய வாழ்க்கை முன்னேற்றத்தைப் பெற்றுவிட்டால் -- லாஸ்ஏஞ்செல்ஸிலும் ரோமிலும் உள்ளது போல் ஷாங்காய், டில்லி இவற்றிலும் ஃபோர்ட்டுகளும் ஃபியட்களும் பெருகிவிட்டால் – உலகின் வாயு 'ஸப்ளை' பயங்கரமாகப் பாதிக்கப்படும்' என்று எச்சரிக்கிறார் விஞ்ஞானி நைபர்கர். இப்படியே போனால் நூறாண்டுக்கு மேல் மனிதர்கள் சுவாசிக்கப் பிராண வாயு கிடைக்காது என்கிறார். அதாவது நூறாண்டுகளில் உலகில் மனித வர்க்கம் அழிந்து, தாவரங்களும் சில விலங்குகளுமே வாழ முடியும் என்கிறார்.

இதற்கு விமோசனம் கிடையாதா? கிடையாமற் போகவில்லை. ஜலமின் திட்டங்கள், அணு உலைகள் ஆகியவற்றிலிருந்து எரி சக்தி பெறும்போது காற்று இப்படி எரிக்கப்படுவதோ, மாசுபடுத்தப்படுவதோ இல்லை. எனவே இனி ஆக்க வேலைகளுக்கு இச்சக்திகளையே பயனுக்க வேண்டும் என்கிறார்கள் ஸயன்ஸ் நிபுணர்கள். — 'யோமியூரி'



ஸ்ரீ விநாயகா பிக்சர்ஸ்



# நான்

ஈஸ்ட்மென் கலர்

டைரக்ஷன்:
ராமண்ணா

சென்னை:
சித்ரா · மகாராஜா
மஹாலக்ஷ்மி மற்றும் தென்னாடெங்கும்

# உல்லாசப் பயணம்



**தோட்டக்கார விஸ்வநாதன்**

"இந்தப் பெரியவர்களுக்கே மூளை யில்லை" என்றான் ராமு முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு.

"ஏன் அப்படிச் சொல்கிறாய்?" என்று கேட்டான் மணி.

"என் அண்ணன் தன் பள்ளிக் கூடத்துச் சிநேகிதர்களோடு 'பிக்னிக்' போகிறேன் என்றால் ஆறு ரூபாய் கொடுத்து, வழியில் சாப்பிட டிபன் வேறு கட்டிக் கொடுக்கிறார்கள். நான் 'பிக்னிக்' போகவேண்டுமென்றால் கூடாதாம். நான் சின்னவனாம். பஸ் லாரியிலே மாட்டிக் கொள்வேனாம். அதனால்தான் சொல்கிறேன், பெரியவர்களுக்கு மூளையே இல்லை" என்றான் ஆத்திரத்தோடு.

"உன் வீட்டில் என்ன சொன்னார்கள்?" என்றான் மணி கோபுவைப் பார்த்து.

"என் வீட்டிலும் பெரியவர்கள் தானே இருக்கிறார்கள்! அவர்களுக்கு மட்டும் மூளை எங்கிருந்து வரும்?" என்றான் கோபு.

மணியின் நண்பர்கள் அத்தனை பேரையும் விசாரித்ததில் அவரவர்கள் வீட்டில் உள்ள பெரியோர்கள் எல்லோருக்குமே மூளை இல்லை என்று தெரிய வந்தது.

"இப்போது என்ன செய்வது?" என்று கேட்டான் விசு.

"பெரியவர்களுக்கு மூளை இல்லா விட்டால் நமக்குமா இல்லை? நாம் போவோம் 'பிக்னிக்'குக்கு" என்றான் மணி.

"எப்போ போகலாம்?"

"வருகிற ஞாயிற்றுக்கிழமை."

"எங்கே போவது?"

"எல்லோருக்கும் தெரிந்த இடமாகப் போனால் கண்டுபிடித்து விடுவார்கள். அதனால் யாருக்கும் தெரியாத இடமாகப் பார்த்துப் போக வேண்டும்" என்றான் மணி.

"அப்படிக்கூட ஓர் இடம் இருக்குமா?" என்றான் விசு.

"என் பெரியப்பாவுக்கு விரியம் பாக்கத்தில் ஒரு பெரிய பங்களா இருக்கிறது. பெரிய தோட்டம். நீச்சல் அடிக்கிறதுக்கு ஒரு குளம் கூட இருக்கிறது. அங்கே போகலாமா?" என்றான் மணி.

"உன் பெரியப்பா சம்மதிப்பாரா?" என்று கேட்டான் விசு.

"என்ன முட்டாள்தனமான கேள்வி? அவருக்குத் தெரியாமல் தானே நாம் அங்கே போகப் போகிறோம்!" என்றான் மணி.

"அந்த வீட்டில் இருப்பவர்கள் அவரிடம் சொல்ல மாட்டார்களா?"

"அந்த வீட்டிலே நேற்றுத்தான் ஒரு காவல்காரனையும், ஒரு குமாஸ்தாவையும் ஏற்பாடு செய்திருக்கிறார் பெரியப்பா. அவர்கள் இரண்டு பேர்களுமே என்னைப் பார்த்ததில்லை. அவர்களிடம் நாம் சமாளித்துக் கொள்ளலாம்."

"நாம் இருக்கும்போது உன் பெரியப்பா வந்து விட்டால்?"

"அவர் நாளைக்குச் சேலம் போகிறார். வருகிற திங்கள்கிழமைதான் திரும்பி வருவார்."

"அப்படியானால் பரவாயில்லை. ஆனால் டிபன் வேண்டுமே. நம் வீடுகளில் பண்ணித் தரமாட்டார்களே, என்ன செய்வது?" என்று கேட்டான் ராமு.

"அதற்கும் எப்படியாவது ஏற்பாடு செய்வோம்" என்றான் ராமு.

ஞாயிற்றுக்கிழமை காலை எட்டு மணிக்கு எல்லோரும் பள்ளிக்கூடத்தில் வந்து சேரவேண்டும் என்றும், பிறகு எல்லோரும் அங்கிருந்து புறப்பட்டு விரியம்பாக்கத்து வீட்டுக்குச் செல்ல வேண்டும் என்றும் தீர்மானம் செய்துகொண்டு சிறுவர்கள் பிரிந்தார்கள்.

மணி நண்பர்களிடமிருந்து விடைபெற்றுக்கொண்டு திரும்பிய சமயத்தில் அவனது பெரியப்பா கந்தசாமியும் அவரது செயலாளர் மோகனும் ஏதோ முக்கியமான சம்பாஷணையில் ஈடுபட்டிருந்தார்கள். புஸ்தகத்தை எடுத்து வைத்துக் கொண்டு படிப்பதற்கு உட்கார்ந்த மணி, படிப்பதாகப் பாவனை செய்தானே ஒழியக் காதைத் நீட்டி வைத்துக் கொண்டு அவர்கள் சம்பாஷணையைக் கேட்பதில் முனைந்தான்.

அதைக் கேட்டதன் பயனாக அவன் மூளை தீவிரமாக வேலை செய்ய ஆரம்பித்தது.

மணியின் பெரியப்பாவான கந்தசாமியின் செயலாளர் மோகன் செய்த ஏற்பாட்டின் படி கோகிலா கந்தசாமிக்கு வரும் கடிதங்களைப் பிரித்துப் பார்த்து அவசரமானவைகளைச் சேலத்துக்கு அனுப்பிவிட்டு மற்றவைகளைக் கந்தசாமியின் மேஜையின்மீது வைக்க ஆரம்பித்தாள். அவள் கடிதங்களைப் பிரிக்கும்போது அரசாங்க முகவரி அச்சடிக்கப்பட்ட கடிதம் ஒன்று வந்திருப்பது தெரிந்தது.

அவசரமாக அதைப் பிரித்துப் படித்தாள்:

அன்புடையீர்,

தங்கள் கடுதாசி கிடைச்சது. நாயித்துக் கிழமை வார்விஷ் அனாதைகள் விரியம்பாக்கத்துக்கு வர்ரூங்க. உதவி செய்யணும். மந்திரி 4 மணிக்குக் கலந்துகொள்வார்.

இப்படிக்கு
அளகேசன்

கோகிலாவுக்கு ஒன்றும் புரியவில்லை. அரசாங்க 'லெட்டர் ஹெட்'டில் எழுதப்பட்டிருந்தாலும் இவ்வளவு கொச்சையாகவா — மொட்டைத் தாதன் குட்டையில் விழுந்த கதையாக — அரசாங்கம் எழுதும் என்று சந்தேகம் வந்து விட்டது.

பிரதேச மொழியைப் புதிதாகக் கையாள்வதனால் இப்படி இருக்கலாமல்லவா என்ற எண்ணம் அந்தச் சந்தேகத்தைக் களைந்தது. மறுநாள் ஞாயிற்றுக் கிழமை யாயிற்றே! குழந்தைகள் வந்துவிட்டால் என்ன செய்வது? மந்திரி கலந்து கொள்வார் என்று இருக்கிறதே! எந்த மந்திரி கலந்து கொள்ளப் போகிறாரோ? இது என்ன தர்மசங்கடம்!

இப்படி எண்ணிய கோகிலா, அரசாங்கத் தலைமைக் காரியாலயத்துக்கு டெலிபோன் செய்தாள். அன்று இரண்டாவது சனிக்கிழமையாதலால் விடுமுறை என்று தெரிந்தது. பிறகு என்ன செய்வதென்று தெரியாமல் ஒரு கணம் யோசித்தாள். ஒரு முடிவுக்கு வந்தவளாய் முதல் அமைச்சர் வீட்டுக்கு டெலிபோன் செய்தாள். மந்திரி வீட்டில் இல்லை என்ற தகவல் கிட்டியது. மறுநாள் ஏதாவது அநாதைக் குழந்தைகள் உதவி சம்பந்தமான நிகழ்ச்சியில் அவர் கலந்துகொள்ளப் போகிறாரா என்று முதல் மந்திரியின் காரியதரிசியைக் கேட்டாள். தமக்குத் தெரியாது என்று அவர் கூறி விட்டார்.



பிறகு சுகாதார மந்திரியின் வீட்டுக்கு போன் செய்தாள். அவர் நல்ல காலம் வீட்டில் இருந்தார். அரசாங்க அலுவலகத்தில் இப்படிக் கொச்சைத் தமிழில் கடிதம் எழுதியிருக்கிறார்கள் என்று புகார் செய்வது சரியல்ல என்று அவளுக்குத் தோன்றவே, கொச்சைத் தமிழ் சம்பந்தமாக ஒன்றும் பேசாமல், ''நான் கந்தசாமியின் வீட்டிலிருந்து பேசுகிறேன். சர்க்காரிலிருந்து ஒரு கடிதம் வந்திருக்கிறது. நாளை வார்விஷ் அனாதைகள் விரியம்பாக்கத்திலிருக்கும் கந்தசாமியின் பங்களாவுக்கு வரப்போகிறார்களாம். அவர்களுக்கு உதவி செய்ய வேண்டும். மந்திரியும் கலந்து கொள்வார் என்று கடுதாசியில் கண்டிருக்கிறது சார். எந்த மந்திரி என்று குறிப்பிடவில்லை. ஒருவேளை நீங்களாக இருக்குமோ என்று கேட்கத்தான் டெலிபோன் செய்தேன்'' என்றாள்.

''கொஞ்சம் இருங்கள்'' என்று சுகாதார மந்திரி தமது டயரியைப் புரட்டிப் பார்த்து, ''அப்படி ஒன்றும் இல்லையே?'' என்றார்.

''இருந்தாலும் இது உங்கள் துறையில் வருவதால் நீங்களும் பங்கு கொள்வது நலம்'' என்றாள் கோகிலா.

''நாளைக்கு நாலு மணிக்கா, சரி, வருகிறேன். ஆனால் வேறு ஒரு மந்திரி வரப்போவதானால் என்ன செய்வது?''

''பெயர் குறிப்பிடவில்லை சார். அவரோடு நீங்களும்வந்தால் இந்த மாதிரி ஒரு நிகழ்ச்சிக்கு முக்கியத்துவம் அதிகம் ஆகும் அல்லவா?'' என்றாள் கோகிலா.

''சரி, நாளை நாலு மணிக்கா? விரியம்பாக்கத்தில் கந்தசாமி பங்களாதானே? வருகிறேன்'' என்றார்.

உடனே கோகிலா எல்லாப் பத்திரிகைகளுக்கும் டெலிபோன் செய்து சுகாதாரமந்திரி வார்விஷ் அனாதைகளுக்கு உதவி செய்யும் ஒரு நிகழ்ச்சியில் கந்தசாமியின் விரியம்பாக்கம் பங்களாவில் கலந்து கொள்ளப் போகிறார் என்று தெரிவித்தாள். கந்தசாமியின் மற்ற நண்பர்களுக்கும் செய்தி அனுப்பினாள். சேலத்தில் இருக்கும் கந்த

# இளமேனியருக்கு இணங்கிய உறவு பியர்ஸ்...















இப்போது, புதிய புள்ளிக்கோல மேலுறையோடு

## மென்மை கொஞ்சும் தூய கிளிசரின் சோப்

பசிய மேனிக்கும் இணங்கிய மென்மையுள்ளது
பியர்ஸ். வாடவிடாமல் உங்கள் சருமத்தை
இளங்கொழுந்து போல் புதுமையோடு போற்றுவது
பியர்ஸ் சோப்பிலுள்ள கிளிசரின். தூய்மையானது
பியர்ஸ்... மாணிக்கம் போல் படிகத் தன்மை படைத்தது.
உங்கள் மேனிமீது இளமை கொஞ்சிடவே: பியர்ஸ்

**தன் தூய்மையைக் கண்கூடாக உணர்த்துவது பியர்ஸ்**

இந்துஸ்தான் லீவர் லிமிடெட்டின் தரமான தயாரிப்பு

லின்டாஸ்-PS. 158-119 TH

சாமிக்கும் 'டிரங்க் கால்' செய்து உடனே புறப்பட்டு வரும்படி சொன்னான். பிறகு விரியம்பாக்கத்தில் இருக்கும் குமாஸ்தாவுக்கு டெலிபோன் செய்து காலையில் வார்னிஷ் அநாதைகள் வரப்போவதாகவும் அவர்களை நன்றாகக் கவனித்துக் கொள்ள வேண்டும் என்றும் சொன்னான்.

ஞாயிற்றுக்கிழமை காலை எட்டு மணிக்கு விரியம்பாக்கத்திலிருக்கும் கந்தசாமியின் பங்களாவுக்கு மணியும் அவன் நண்பர்கள் பதினைந்து பேரும் வந்து சேர்ந்தார்கள்.

பதினாறு குழந்தைகள் வந்திருப்பதைப் பார்த்து மலைத்துப் போனார் குமாஸ்தா.

''இத்தனை பேரா?'' என்றார்.

''இதுக்கே இப்படி மலைச்சு நிக்கிறீங்களே? வார்னிஷ் குடிச்சுச் சுமார் இருநூறு பேருக்கு மேலே செத்துப் போனார்களே. அத்தனை பேருடைய குழந்தைகளும் வந்தால் என்ன செய்வீர்கள்?'' என்றான் மணி வெடுக்கென்று.

''வாருங்கள், வாருங்கள்'' என்று அவர்களை உள்ளே அழைத்துச் சென்றார் குமாஸ்தா. பிறகு ''தோட்டத்தில் விளையாடிக்கொண்டிருங்கள். காப்பி டிபனுக்கு ஏற்பாடு செய்துவிட்டு வந்து கூப்பிடுகிறேன்'' என்றார்.

தோட்டத்தை நோக்கி ஓடினார்கள் குழந்தைகள். அவ்வளவுதான்! கிஷ்கிந்தா காண்டம் ஆரம்பமாயிற்று. குமாஸ்தாவுக்கு வயிற்றைப் 'பகீர்' என்றது. முதலாளி வந்து தோட்டத்தின் நிலையைக் கண்டு குமுறினால் என்ன செய்வது என்று எண்ணிய கையோடு இந்தக் குழந்தைகளை நன்கு கவனிக்காவிட்டாலும் பாட்டுக் கேட்க வேண்டுமே என்ற பயம் பிடித்துக் கொண்டது. எனவே பலகாரம், காப்பி மட்டுமின்றி வகையான சாப்பாட்டுக்கும் ஏற்பாடு செய்து விட்டார்.

சரியாக ஒரு மணிக்குச் சில பிரமுகர்கள் கந்தசாமியின் வீட்டுக்கு வந்து சேர்ந்தார்கள். கந்தசாமியும் மோகனும் சேலத்திலிருந்து வந்து சிறிது நேரம் ஆகியிருந்தது.

''சுகாதார மந்திரி நான்கு மணிக்கு வருகிறார். பத்திரிகைக்காரர்களை அந்நேரத்துக்கு வரச் சொல்லி ஏற்பாடு செய்திருக்கிறேன்'' என்றார் கந்தசாமி.

''அநாதைக் குழந்தைகளுக்குத் துணி மணிகளைக் கொடுத்து உதவ வேண்டும்'' என்றார் பாலு.

''நல்ல யோசனைதான். ஆனால் இன்று விடுமுறையாயிற்றே. புதுத் துணி மணிகளை வாங்குவது எப்படி? அதனால் நம் வீட்டுக் குழந்தைகளுக்குத் தேவையில்லாத துணி மணிகளைக் கொடுத்து உதவவேண்டும் அந்த அனாதைக் குழந்தைகளுக்கு'' என்றார் மற்றொரு பிரமுகர். ஒரு கல்லில் இரண்டு மாங்காய் அடித்த பெருமை அவர் முகத்தில் பளிச்சிட்டது.

''சரி, எல்லோரும் மூன்றரை மணிக்கு அங்கே வந்து சேர வேண்டும். மந்திரி வருகிறாரே, மாலை மரியாதை செய்ய வேண்டாமா?'' என்றார் பரசுராமன் என்ற மற்றொரு பிரமுகர்.

''ஒரு மந்திரி அல்ல, இன்னொரு மந்திரி கூட வரப் போவதாகத் தெரிகிறது. யார் என்றுதான் தெரியவில்லை'' என்றார் கந்தசாமி.

''ஏன் இன்னார் என்று கடிதத்தில் எழுதவில்லையா?'' என்று கேட்டார் பாலு.

''கடிதமே ரொம்ப அவசரத்தில் எழுதின மாதிரி இருக்கிறது. கொஞ்சம் கொச்சையாகக் கூட இருக்கிறது. நாலு மணிக்கு மந்திரி வந்து கலந்துகொள்வார் என்று மட்டும் கண்டிருக்கிறது. பெயர் குறிப்பிடவில்லை'' என்றார் கந்தசாமி.

''சரி, இரண்டு மாலைகளுக்கு ஏற்பாடு செய்வோம். சிற்றுண்டிகளுக்கு ஏதாவது ஏற்பாடு செய்தால் நல்லது'' என்றார் பரசுராமன்.

''காலைப் பலகாரம், பகல் சாப்பாடு இவற்றுக்காகச் சுமார் நூறு ரூபாய்கள் நான் செலவழித்துவிட்டேன்'' என்றார் கந்தசாமி.

''பரவாயில்லை. நானும் பரசுராமனும் சிற்றுண்டிச் செலவை ஏற்றுக்கொள்கிறோம். ஐஸ்கிரீம், பாதாம்கிரோடு சிற்றுண்டிக்கு ஏற்பாடு செய்யுங்கள். இவைகளை அந்தக் குழந்தைகள் எப்போது சாப்பிடப் போகின்றனர்?'' என்றார் பாலு.

''மோகன், உடனே ஏற்பாடு செய்து விடுங்கள்'' என்றார் கந்தசாமி தம் காரியதரிசி மோகனைப் பார்த்து.

''இன்னொரு விஷயம். நாம் இப்படி ஒரு நல்ல தேநீர் விருந்து வைப்பது அந்தக் குழந்தைகளுக்கு ஒரே ஆச்சரியமாக இருக்கட்டும். எல்லாவற்றையும் ஏற்பாடு செய்துவிட்டு, மந்திரி வந்ததும், குழந்தைகளை ஒவ்வொருவராக வரச் சொல்லி மந்திரிக்கு அறிமுகப்படுத்தி, துணிமணிகளைக் கொடுத்துப் பிறகு சிற்றுண்டி சாப்பிட உட்கார வைப்போம்'' என்றார் பாலு.

''நல்ல யோசனை. அப்படியே செய்வோம். மோகன், பங்களாவில் இருக்கும் குமாஸ்தாவுக்கு இதைச் சொல்லிச் சரியாக நான்கு மணிக்கு ஒவ்வொரு குழந்தையாக உள்ளே அனுப்பும்படி சொல்லுங்கள்'' என்றார் கந்தசாமி.

விரியம்பாக்கத்துப் பங்களா ஹாலில் தேநீர் விருந்துக்குப் பிரமாதமான ஏற்பாடு ஆகியிருந்தது. கந்தசாமி குமாஸ்தாவைக் கூப்பிட்டு, குழந்தைகளிடம் போய் மந்திரியிடம் மரியாதையாக நடந்துகொள்ள வேண்




'' என்ன, கார் வாங்க வேண்டுமா? அது நடக்காத காரியம் !''

'' நடக்காத காரியத்துக்குத்தான் கார் வாங்க வேண்டுமென்கிறேன். கார் வாங்கியபின் நடக்க வேண்டியதில்லையே !'' — ஆர். எம். ராஸ்.

டும் என்றும், அவர்கள் கேட்கும் கேள்விகளுக்கு உருக்கமாகப் பதில் சொல்ல வேண்டும் என்றும் சொல்லி அனுப்பினார்.

என்றைக்கும் இல்லாத் திருநாளாக அன்றைக்கு மந்திரி குறிப்பிட்ட நேரத்துக்கு ஒரு நிமிஷம் முன்னதாகவே வந்து, விழாவை — விழாவா அது? — தொடங்கி வைத்தார். "நாட்டில் ஏற்பட்ட இந்த எதிர்பாராத விபரீதத்தால் எத்தனையோ குழந்தைகள் அநாதைகளாகி விட்டன. நீங்கள் செய்யும் இச் சேவையை நான் வாயாரப் புகழ்கிறேன். இதுபோல் நாட்டில் உள்ள பல பிரமுகர்களும் சேவை செய்ய முன்வர வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்" என்று அவர் சொற்பொழிவாற்றியதும் அநாதைக் குழந்தைகளின் அறிமுகப்படலம் தொடங்கியது.

தோட்டக்காரன், வாசுவை முதலில் அழைத்து வந்தான். வாசுவின் தலையெல்லாம் கலைந்து போய்க் கோரமாக இருந்ததோடு அவன் அணிந்திருந்த உடையும் மிகவும் கேவலமாக இருந்தது.

மந்திரியோடு நின்ற பிரமுகர் பாலுவுக்குத் தம் மகனை அந்த அலங்கோலக் காட்சியில் கண்டதும் தலை சுற்றியது. ஆனால் அந்த நேரத்தில் அவனைத் தம் மகன் என்று காட்டிக் கொண்டால் அதைவிட அவமானம் வேறு இல்லை என்று தோன்றவே வந்த ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு தலைமறைவானார். வாசு முன்னே நிற்கும் தம்மைப் பார்த்து 'அப்பா!' என்று எங்கே அழைத்து விடுவானோ என்று திகில்.

"வா, குழந்தாய், உன் பெயரென்ன?" மந்திரி பரிவோடு கேட்டார்.

"வாசு!"

"நல்ல பெயர். உன் தந்தை குடிகாரரா?"

"அதை ஏன் கேட்கிறீங்க சார், எப்பவும் 'லேட்'டாவே வீட்டுக்கு வருவார். எங்க அம்மாகூட 'ஏன் இப்படிக் குடிச்சுட்டு வந்தாப்போல் சீறிச் சீறி விழறீங்கள்'னு அடிக்கடி சண்டை போடுவாங்க" என்றான் வாசு.

பாலுவுக்குத் தலை சுற்றவாரம்பித்தது. வாசுவிடம் துணி மூட்டையைத் தந்தவுடன் புகைப்படக்காரர்கள் அந்தக் காட்சியைப் போட்டோப் பிடித்துக் கொண்டனர்.

பிறகு பரசுராமன் என்ற பிரமுகரின் மகன் அனாதையாக மந்திரியின் முன்பு நின்றான். பரசுராமன் வார்னிஷ் குடித்து விட்டு வீட்டில் செய்யும் அட்டூழியத்தை விவரித்தான்.

பிரமுகர்களுக்கு விஷயம் ஒரு மாதிரியாகப் புரிய ஆரம்பித்தது. கந்தசாமி மோகன் காதில் ஏதோ சொன்னார். மோகன் கோகிலாவைக் கூப்பிட்டு ஏதோ சொல்ல அவள் ஓட்டமாக ஓடி வெளியே நிற்கும் மணியை அழைத்துக் கொண்டு காரில் ஏறிக் கந்தசாமியின் வீட்டை அடைந்தாள். பிறகு கடுகடுத்த முகத்தோடு கந்தசாமியும் வீட்டுக்கு வந்தார். மணியைக் கூப்பிட்டுக் கண்டிக்க ஆரம்பித்தார்.

"பெரியப்பா! என்மேல் ஏன் கோபப்படுகிறீர்கள்? உங்களுக்கும் மற்றப் பிரமுகர்களுக்கும் இதனாலே எத்தனை பேரும் புகழும் பார்த்தீர்களா? சந்தோஷப்படுவதற்குப் பதில் சங்கடத்துடன் நிற்கிறீர்களே!" என்றான்.

"பேராவது புகழாவது? வாசு வந்து அவன் தகப்பன் குடிகாரன்னு மந்திரியிடம் சொன்னானே, ஒருவேளை வாசு பாலுவின் பிள்ளை என்று மந்திரிக்குத் தெரிந்திருந்தால் என்ன வாகியிருக்கும்?"

"அவன் உண்மையைத்தானே சொன்னான்? அவுங்க அம்மாகூட உங்ககிட்டே இதைப் பற்றிப் புகார் செய்யவில்லையா?" என்று கேட்டான் மணி.

"அரசாங்க முகவரி உள்ள கடிதம் வந்ததே எப்படி வந்தது?" என்றார் மோகன்.

"வாசுவின் அப்பா அரசாங்கத்தில் பெரிய வேலையில் இருக்கிறார் அல்லவா? அவசர உபயோகத்துக்காக வீட்டில் சில காகிதங்களை வைத்திருக்கிறார். அதில் ஒன்றை எடுத்து வாசு என்னிடம் கொடுத்தான். நான் எழுதினேன்" என்றான் மணி.

"இதைப் போல் கடிதங்களைப் பூட்டி வைக்க வேண்டும் என்று இதிலிருந்து தெரிகிறதல்லவா?" என்று கந்தசாமி மோகனைப் பார்த்துக் கேட்டார், ஏதோ மோகன்தான் அந்தத் தவற்றைச் செய்துவிட்டாற்போல.

"மணி! நீ இப்படிச் செய்யக் காரணம் என்ன?" என்று கேட்டான் மோகன் மணியைப் பார்த்து.

"சின்னப் பையன்களைப் 'பிக்னிக்' போகக் கூடாதென்று பெரியோர்கள் முட்டாள்தனமாகக் கண்டிக்கிறார்கள் அல்லவா? அதனால் நாங்கள் பிக்னிக் போனோம். காப்பி பல காரத்துக்காக இந்த எத்து வேலை செய்தோம்" என்றான் மணி.

"இன்றைக்கு இரவு சாப்பாடு உனக்குக் கிடையாது. நீ வீட்டை விட்டு வெளியிலும் போகக் கூடாது" என்று தண்டனை விதித்தார் கந்தசாமி.

அன்றைய மாலைத் தினசரிப் பதிப்பில் கந்தசாமியைப் பற்றியும், மற்றப் பிரமுகர்களைப் பற்றியும் அவர்கள் வார்னிஷ் அனாதைகளுக்குச் செய்த சேவைகளைப் பற்றியும் பத்தி பத்தியாகப் பிரசுரமாகியிருந்தது.

அதைக் கந்தசாமி படித்து சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தபோது, மணி வந்து ஒரு கடிதத்தை அவரிடம் நீட்டி "பெரியப்பா! இதைப் பத்திரிகைக்கு அனுப்பப் போறேன்" என்றான். கந்தசாமி கடிதத்தை உரக்கப் படிக்கலானார்.

"ஐயா! 'வார்னிஷ் அனாதைகள்' விஷயம் முழுவதும் டூப்பு — வாசு பாலு என்பவரின் பிள்ளை. அவன் வீடு...."

"டேய், மணி, என்னடா இது?" என்றார் கந்தசாமி.

"பிக்னிக் போனது தப்புன்னுதானே எனக்குத் தண்டனை கொடுத்தீங்க. நீங்க 'டூப்' அடிச்சால் அதுக்குத் தண்டனை வேண்டாமா?" என்றான்.

"நான் ஏதோ விளையாட்டுக்குச் சொன்னேன். அதைப் போய்ப் பெரிதாக எடுத்துக் கொண்டு விட்டாயே!" என்று மணியைத் தட்டிக் கொடுத்தார் கந்தசாமி.

# வீடுகளுக்கும் மற்றும் உணவு விடுதிகளுக்கும் ஓர் அரிய சாதனம்

# லீக்கோ நவீன வீட்டு எரி பொருள்

சிக்கனமானது • மற்ற எரிபொருள்களைவிட அதிக அனலை ஈந்து நீண்ட நேர வெப்பத்தை கொடுக்கிறது • புகையாதது • எந்தரக கரி அடுப்பினிலும் உபயோகப்படுத்தவல்லது.



சிறிய 'லீக்கோ' துண்டுகளை எடுத்துக் கொள்ளவும்.



பிறகு மெல்லிய அடுக்காக அடுப்பினில் பரப்பி வைக்கவும்.



வழக்கமான முறையில் எரிய வைக்கவும்.



சில நிமிடங்கள் கழித்து நன்றாக கடா விட்டவுடன் மேலும் வேண்டிய அளவு 'லீக்கோ' சேர்த்துக் கொள்ளவும்.

நெய்வேலி லிக்னைட் கார்ப்பொரேஷன் லிமிடெட், நெய்வேலி-1.






FDS NLC 640 TM

# அம்ப்ரோஸ் பியர்ஸ் குட்டிக் கதைகள்



[அம்பிரோஸ் பியர்ஸ் என்ற எழுத்தாளர் 1842ம் வருஷத்திலே அமெரிக்காவிலே ஒஹையோ நகரத்தில் பிறந்தவர். மெக்ஸிகோவில் உள்நாட்டு யுத்தம் ஒன்று நடந்து கொண்டிருக்கும்போது, அதாவது 1913-ல் இவர் அங்கு போனார். பிறகு இவரைப் பற்றி ஒன்றுமே தெரியாது. சுடப்பட்டு இறந்தார் என்றே நம்பப்படுகிறது. மனித வர்க்கத்தின் மீது இவருக்கு அளவுகடந்த மனக் கசப்பு. இந்த மனக்கசப்பை இவருடைய இந்தக் குட்டிக் கதைகளே பறையறைகின்றன. தவிரவும் இவர் கலையறிவு படைத்தவர் என்பதையும் இந்தக் கதைகளின் மூலம் அறிந்து கொள்ளுகிறோம்.]

## அப்பாவும் மகனும்

☐ கீழ்ப்படிதலில்லாத முன்கோபியான மகனிடம் தகப்பன் சொல்லுகிறான்: ''மகனே! கோபம் கூடவே கூடாது! கோபம் இருந்தால், தன் தவற்றை உணர்ந்து கொள்ள முடியாது போய் விடும். ஆகவே, 'அடுத்த தடவை எனக்குக் கோபம் வரும்போது, ஒன்றிலிருந்து நூறு வரை எண்ணி விட்டுத் தான், அசையவோ பேசவோ செய்வேன்' என்று வாக்குத்தத்தம் செய்துகொடு''.



அப்படியே மகன் வாக்குத் தத்தம் செய்து கொடுத்தான். உடனே அவனைத் தன் கைத் தடியினால் ஓங்கி அடித்தான் தகப்பன். மகன் ஒன்று, இரண்டு, மூன்று என்று எண்ணத் தொடங்கினான். ஆனால் துரதிர்ஷ்டவசமாக அவன் எழுபத்தைந்து எண்ணி முடித்த போதே, தகப்பன் பக்கத்தில் நின்ற வாடகை வண்டியில் ஏறிக் கொண்டு சிட்டாகப் பறந்து விட்டான்.

## விமர்சகர்கள்

☐ ஆண்டினூஸ் குளித்துக் கொண்டிருக்கும்போது மினர்வா பார்த்து விட்டாள். அவன் அழகிலே மயங்கி, அவனைக் காதலிப்பதற்காக மினர்வா தேவலோகத்திலிருந்து இறங்கி வந்தாள். ஆனால் பார்த்த மாத்திரத்தில் யாரையும் கல்லாக மாற்றிவிடக்கூடிய ஒரு மாயக் கேடயத்தை அவன் கொண்டு வந்துவிட்டதனால், ஆண்டினூஸ் அதைப் பார்த்ததும் திடீரென்று கல்லாக மாறி விட்டான். உடனே மினர்வா பழைய படியும் ஆண்டினூஸை மனிதனாக மாற்றுவதற்கு வரம் வாங்குவதற்காகத் தேவலோகத்துக்குப் போனாள். அவன் மேலே போய் வரம் வாங்குவதற்கு முன்பாக, ஒரு சிற்பியும், ஒரு விமரிசகரும் அவ்வழியாக வந்தனர். அவர்கள் ஆண்டினூஸின் உருவச் சிலையைப் பார்த்தனர்.

சிற்பி சொன்னார்: ''இந்தச் சிலை நன்றாகவே இல்லை. மார்பு மிகவும் சுருங்கி யிருக்கிறது. ஒரு கை மற்றொரு கையை விட அரை அங்குலம் குறைந்திருக்கி



றது. தோற்றமோ இயற்கைக்கு முரண் பட்டிருக்கிறது. இம்மாதிரியாகத் தோற்றமளிப்பது சாத்தியமில்லாத காரியம் என்றுகூட நான் சொல்லுவேன். என் நண்பரே! நான் ஆண்டினூஸ் சிலை ஒன்று செய்திருக்கிறேன். அதைப் பார்க்க வேண்டும் நீங்கள்!''

விமர்சகர் சொன்னார்:

''என்னுடைய அபிப்பிராயம் என்னவென்றால், சிலையை ஏதோ பார்க்கலாம் போல் இருக்கிறது; அவ்வளவுதான். ஆனால் ஆண்டினூஸ் எந்த நாட்டைச் சேர்ந்தவனோ அந்த நாட்டவனைப் போல் இல்லை, சிலையின் முகத் தோற்றத்தைப் பார்த்தால்! இது இயற்கைக்கு ஒவ்வாமல் இருக்கிறது. அது சரி, நீங்கள் 'சிற்பத்தின் தோற்றங்களில் ஏற்படும் தவறுகள்' என்ற புத்தகத்தைப் படித்திருக்கிறீர்களோ?''

## வாக்குறுதி

□ ஒருவன் சாகக் கிடக்கும் தறுவாயில் மனைவியிடம் சொன்னான்: ''என் மேஜையில் ஒரு சிவப்பு மெழுகுவர்த்தி இருக்கிறது. அது பெரிய பாதிரியார் ஆசிர்வாதத்தைப் பெற்றது. அது இருக்கும் வரை நீ மறுமணம் பண்ணிக் கொள்வதில்லை என்று சத்தியம் செய்து கொடு.''



அவ்விதமே அவள் சத்தியம் செய்து கொடுத்தாள். அவனும் செத்துப் போனான். அவள் சவப்பெட்டி அருகில் போய்த் தன் கையில் அந்தச் சிவப்பு மெழுகுவர்த்தியைக் கொளுத்தி வைத்துக் கொண்டு, அது முழுவதும் கரையும் வரையில் நின்றுகொண்டிருந்தாள்.

## அவளது அழகு

□ ஒரு விதவை தன் கணவனுடைய சமாதிக் குழியின் அருகில் நின்று அழுது



கொண்டிருந்தாள். அப்போது ஒருவன் தான் வெகு காலமாக அவளைக் காதலித்து வருவதாகக் கூறினான்.

''சீ! காதல் பேச இதுவா நேரம்?'' என்றாள் விதவை.

அதற்கு அவன் சொன்னான்:

''என் காதலைத் தெரிவிக்க நான் நினைக்கவில்லை. உன் அழகுதான் என்னைப் பேச வைத்தது.''

''நான் அழாமல் இருக்கும்போது நீ என்னைப் பார்க்க வேண்டும்'' என்றாள் அந்த விதவை.

## ஆடும் சிங்கமும்

□ செம்மறியாடு (சிங்கத்திடம்): ''நீ ஒரு சண்டைக்கார மிருகம். அதனால் தான் உன்னைத் துப்பாக்கியால் வேட்டையாடுகிறார்கள். என்னைப் பார். நான் சாத்வீக எதிர்ப்புப் பண்ணுகிற



பிராணி. அதனால் என்னை அவர்கள் வேட்டையாடுவதில்லை.''

சிங்கம்: ''அவர்கள் உன்னை வேட்டையாட வேண்டிய அவசியமே இல்லையே! அதற்குப் பதிலாக அவர்கள் உன்னை வளர்க்க முடியும் அல்லவா?''

## விரோதிகளில்லாதவன்

□ ஓர் அப்பாவி மனிதனை ஓர் அந்நியன் குண்டாந்தடியால் அடித்துப் புடைத்து விட்டான்.

அவனைக் கோர்ட்டில் கொண்டு வந்து நிறுத்தினார்கள். அப்பாவி மனிதன் நீதிபதியைப் பார்த்து, ''என்னை ஏன் அடித்தான் என்றே எனக்குத் தெரியாது. இந்த உலகத்தில் எனக்கு ஒரு விரோதிகூடக் கிடையாது'' என்றான்.



''அதனால்தான் நான் அவனை அடித்தேன்'' என்றான் குண்டாந்தடிக்காரன்.

''அடித்தவனை விடுதலை செய்து விடுங்கள். விரோதிகள் இல்லாதவனுக்கு சிநேகிதர்களும் இருக்க முடியாது. அப்படிப்பட்டவர்களுக்காகக் கோர்ட் நடத்தப்படவில்லை'' என்றார் நீதிபதி.




* வார்த்தைக்கு

* எட்டாத

* வண்ண மலர்

கல்கி தீபாவளி மலரைப் பாராட்டி எழுத வார்த்தைகளே கிடைக்கவில்லை. தமிழ் அகராதியில் தேடிக் கொண்டிருக்கிறேன். கிடைத்ததும் எழுதி அனுப்புகிறேன். அது வரை கொஞ்சம் பொறுத்துக் கொள்ளுங்கள்.

திருவனந்தபுரம் எஸ். எஸ். மணி

இவ்வருடத்திய கல்கி தீபாவளி மலர் மிகச் சிறப்பாக இருக்கிறது. நடமாடும் தெய்வத்தின் மூவர்ணத் திருவுருவும், என் விருப்பத்துக்கிணங்க வெளியிடப்பட்டுள்ள கணநாதனின் உயிரோவியமும் மலரின் நறுமணத்துக்கு உறுதுணையாக இருக்கின்றன. மங்கள ஸ்நானம் செய்து இறைவன் முன் நின்று காமகோடியின் கருணைமொழியை ஒரு முறை மனமார மனனம் செய்த பிறகே புத்தாடை உடுத்தி நிறைவெய்தினேன் என் பதை மிக்க மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன். கொத்தமங்கலம் சுப்புவின் ''காமகோடியில் கனிகள் இரண்டு'' படிக்கப் படிக்கத் தெவிட்டாது பரவசப்படுத்துகிறது.

பீஹார் வி. எஸ். பாசு

கல்கி மலர் அட்டைப் படத்தைப் பார்த்து விட்டால் பின்னர் பிரிக்கவே தோன்றவில்லை. சிலருக்குக் 'கை வந்த கலை' என்கிற மாதிரி கல்கிக்கு முருகப்பெருமானும் விநாயகப் பெருமானும் யார் எப்படிப் படம் போட்டாலும் நேராக வந்து காட்சி யளிக்கிறார்கள்.

சுவாமிகளின் திருவுருவத்தைப் பார்த்து விட்டு மனமில்லாமல் பக்கங்களைப் புரட்டினால், 'கானம் கண்ட காட்சி'யில் கண்கள் அப்படியே லயித்து விடுகின்றன.

மேலும் மேலும் புரட்டிப் பார்க்கப் பார்க்க பக்தியுணர்வில் மனம் திளைக்கிறது. தீபாவளி மலரைப் பட்டாசைப் போல் பொழுது போக்கு அம்சமாக நினைத்தது தவறு என்று நினைத்து மனம் வெட்கம் கூட அடைகிறது. பக்திச் சுவையைக்கூட இவ்வளவு சுவாரசியத்துடன் தர முடியுமா என்று பிரமிப்பாக இருக்கிறது.

மலருக்காக என்று வேறு வேறு காட்சிகளாகப் பல துறைகளில் சிந்தித்து, அவற்றை ஓவியர்களின் ஒத்துழைப்புடன் அமைத்துத் தொகுத்தளிப்பதில் தங்கள் உழைப்புக்குப் பூரணமான வெற்றி கிடைத்திருக்கிறது.

சென்னை — 33 வ. சா. நாகராஜன்

தமிழக மலர்களிலேயே 'இவ்வாண்டு முதல் இடம் பெற்றது கல்கி என்றே கூறலாம். கவிதைகளை நிரம்ப அளித்துப் படிப்பதற்கு இனிமை சேர்த்து விட்டீர்கள்!

திருச்சி — 2 சண்முக சுப்பிரமணி

மலர் பிரித்தேன்
பிரிக்கு முன்னர் — மலர்
முகப்பில் மயங்கி
நின்றேன் — முருகன்
வேல்விழியாள் தேவானைத்
திருமணங் கண்டேன்
வேலர்க்கும் பின்னுறையும்
தேவர்க்கும் வணக்கம் !

கோலஞ்செய் தேவனின்
தூதர் — கொலுவிருந்து
நாலுஞ்செய் நல்லாத்மா
'காமகோடி கருணை மொழியும்'

ஞாலத்தின் நன்முனிவன்
மறைமா மணியின்
சீலமாம் 'வாய்மையே
எளி'தென்னும் கூற்றும்

காலத்தைக் கடந்துவெல்ல
கரங்காட்டும் புனிதன்
கானத்தின் தலைவன்
தியாகய்யர் பற்றி(யி)ந்த

சீலமிகும் பாரதத்தின்
ரத்னம்கூற — இன்னும்
சிறந்திடும் கருத்துரைகள்
காணக் களிப்படைந்தேன் !

உலகெலாம்கூடி ஒன்றில்
வாய்த்ததுவோ வென்ன
உலவிடும் நற்கதைகள்,
கவிதைகள், கற்பனைத்தாரிகை

நிலவிடும் ஓவியக்கூட்டம்
ஒன்றுயிரண்டா? அடடா !
நின்றயர்ந்தேன் நிறைமனத்துடன்
வாழ்த்து கின்றேனே !

சேலம் — 9 என். ராஜகோபாலன்

கல்கி தீபாவளி மலரில் காளிதாசர் இராமாயணம் என்ற தலைப்பில் ஏழாம் படத்தில் விதவைகளான கௌசல்யையும், சுமித்திரையும் தலையில் பூவும் நெற்றியில் பொட்டும் வைத்துக் கொண்டிருப்பதாகக் காணப்படுகிறது. விந்தை !

சைதாப்பேட்டை சம்பத்

Printed & published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Kilpauk, Madras-10.
**Managing Editor: T. Sadasivam.**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

இலங்கையில் 40 சதம்
தபால் செலவு தனி